# ஸ்ரீ மாதா

'சாதனரகசியம் சர்வசித்தாந்த சௌரபம'
முதலிய பல நூல்களை எழுதியவரும்
(பாபட்லா மற்றும் பீமுனிபட்டினம்)
ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமங்கள்
நிறுவியவருமான பரமஹம்ச
பரிவ்ராஜகாசார்ய

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ அநுபவானந்த ஸ்வாமிகளின் சிஷ்யை

## அன்னை தியாகீசானந்த புரி

தமிழில் தருபவர்

அ. நடராஜன்

பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பெற்று
சக்தி வழிபாட்டின் சிறப்பினை அநுபவ
நோக்கில் விவரிக்கும் அரிய நூல்.

வெளியீட்டாளர் :

**சுவாமி அநுபவானந்த யோக கேந்திரம்**

பீமுனி பட்டிணம் -531 163.

விசாகபட்டினம் மாவட்டம் (ஆந்திர மாநிலம்)

**SRI MATA** By Sri Mataji Thagisanada Puri

(A Practical Guide for the worship of the Divine Mother)

வெளியீட்டு எண் : 042



This book is published with the Financial Assistance from '
' THE TIRUMALA TIRUPATI DEVASTANAMS' under their scheme Aid to Publish Religious Book.

முதற் பதிப்பு : 1993

இலவச வெளியீடு. - ( ஸ்ரீ மாதாவைப் பூஜிப்பதற்கு)

வெளியீட்டாளர் :

சுவாமி அநுபவானந்த யோகக் கேந்திரம்

பீமுனிபட்டினம் - 531 163

விசாகபட்டினம் மாவட்டம் (ஆந்திர மாநிலம்)

மற்றும்

ஸ்ரீ அநுபவானந்த கிரந்தமாலா.

எம். ஜி. ரோடு . பாபட்லா - 522 101 (ஆந்திர மாநிலம்)

Swami Anubhavananda Yoga Kendra (Bheemunipatnam and Sri Anubhavananda Granthamala (Bapatla) are popularsing and propagating spiritual books and Devotional Stereo Music Casettes in several languages for the Guidance and enlightenment of **Seekers of Truth**.

*Typesetting & Printing by* :

**Gee Bee Graphics**

40/3 Mint subbarayalu Naidu St, Madras-600 021.

## அறிமுகம்



# Sri Mataji Tyagisananda Puriji

அன்னை தியாகீசானந்த புரி அவர்கள் 1934 - இல் சுவாமி விவேகானந்தர் பிறந்த புஷ்ய பகுள சப்தமி (சாந்திரமானக் கணக்கிலான தை மாதம் கிருஷ்ண பட்சம் சப்தமி) நன்னாளில் விஜயநகரத்தில் பிறந்தார். தாய்தந்தையர் திருமதி லக்ஷ்மிகுன்னம்மா, நீலகண்ட சாஸ்திரி. சாஸ்திரியார் பாலதிரிபுரசுந்தரி உபாசகர், சங்கீத வித்துவான், சோதிடவியல் நிபுணர். துறவறம் பூண்டு சுவாமி நீலகண்டர் என்னும் பெயரில் பெரும்புகழ்படைத்தவர்.

அன்னை அவர்களுக்கு அவருடைய பன்னிரண்டாவது வயதில், பீமுனிபட்டினம் சர்வகலாமூர்த்தி, தவச் செல்வர், அனைத்துச் சாத்திரங்களிலும் விற்பன்னர், இராமகிருஷ்ண பரமஹம்சரின் பற்றாளர் ஆன ஸ்ரீ அநுபவானந்த சுவாமிகளின் அறிமுகம் ஏற்பட்டது. 'சாதனை என்றால் என்ன?' என்று வினா எழுப்பி, சாதனைபற்றிய விவரங்களைக் கடிதங்கள் வடிவில் 'சாதன ரகசியம்' (The Secret of Yoga Sadhana) என்னும் பெயரில் சுவாமிகளிடமிருந்து பெற்ற பேறுடையவர் அன்னை அவர்கள். இவ்வரிய நூல் இன்று தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம், இந்தி, தெலுங்கு மொழிகளில் பெரிதும் பிரசித்திபெற்று, அயல்நாட்டு மொழிகளிலும் பெயர்க்கப்பெற்று, இருபது பதிப்புகளைக் கண்டிருக்கின்றது.

அன்னை அவர்கள் 1947 - இல் சுவாமிகளின் சந்நிதியை அடைந்து, பிரம்மசாரிணியாக இருந்து, சாதன வித்தையினைப் பயின்று, 1954 - இல் அன்னை சாரதா தேவியின் நூற்றாண்டு விழாவின்போது தமது குருவிடமிருந்து கல்கத்தாவில் துறவறம் மேற்கொண்டார்; துறவு தீட்சையின் போது சுவாமிகள் அவருக்கு 'நியாமீசானந்த புரி' என்னும் புதிய பெயரினைச் சூட்டினார். பல்துறை அறிவுடைய அன்னை அவர்கள் நன்கு இறை இசைப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். புகழ் வாய்ந்த பேச்சாளர். வேதங்கள், உபநிடதங்கள், மந்திர மற்றும் தந்திர சாத்திரங்கள் ஆகியவற்றை ஆர்வமுடன் பயின்று, புகழ் வாய்ந்த பல நூல்களை இயற்றியுள்ளார். சுவாமிகளுடன் சேர்ந்து நம் நாட்டில் பல்லாயிரக்கணக்கில் அறவுரைகள் நிகழ்த்தியுள்ளார்.

1973 - இல் தமது குரு மகாசமாதி அடைந்தபிறகு சுவாமிகள் அவர்களினால் நிறுவப்பெற்ற, அமைதி தவழும் ஆன்மிகச் சூழலில் எழில் நடமிடும் பீமுனிபட்டினம், பாபட்லா ஆகிய இடங்களில் உள்ள ஆச்ரமங்களை நிர்வகித்துக் கொண்டும், 'சுவாமி அநுபவானந்த யோக கேந்திரம்' வாயிலாகப் பல்வேறு மொழிகளில் பல நூல்களையும், பக்தி ஊட்டும் பல்திசைத் தொனி ஒலிப்பேழைகளையும் வெளியிட்டுக் கொண்டும், நூல்கள், உபந்நியாசங்கள் ஆகியவை மூலம் சமுதாய மேன்மைக்குத் தொண்டாற்றி வருகின்றார், அன்னை நியாமீசானந்த புரி அவர்கள்.

31-12-93 பிரஹ்மசாரி சுதாசைதன்ய

## ஸ்ரீ மாதாவின் திருவடித்தாமரைகளின் வழிபாட்டினில்........

* ஆச்வயுஜ மாதத்தில் தேவி நவராத்திரி விழா வந்துள்ளது. ஆசிரமத்தில் பூஜைகள், பாராயணங்கள், 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம'ச் சொற்பொழிவுகள் நடைபெற்று வருகின்றன. அச்சமயத்தில் 'அம்மா! எனக்குப் புத்தகம் எழுதித் தருவீர்கள் அல்லவா!' எனக் கடிதம் வந்தது, (சென்னை, ராஜலக்ஷ்மி பவுண்டேஷன்) சிரஞ்சீவி ராஜாவி னிடமிருந்து.

ஆச்வயுஜ மாதத்தில் வளர்பிறைப் பிரதமையிலிருந்து தேவிபூஜைகள் தொடக்கம். அவை சக்தி வழிபாட்டுடன் தொடர்புள்ளவை. 'அட்ல ததிய' எனப்படும் அக்ஷயதிருதீ யையும் கன்னிப்பெண்களின் பண்டிகையே. அதுவும் சக்தி யுடன் தொடர்புள்ளதே. உலகிற்கு இன்னல் விளைவித்த நரகாசுரனை அழிப்பதற்காக ஸ்ரீ கிருஷ்ணனுடன் கூடக் கிளம்பிய சத்தியபாமை பிறிதொரு சக்தியாக எழுச்சி பெற்ற நரகசதுர்தசி (தீபாவளி)யும் சக்தியின் சிறப்பினைப் பறை சாற்றுவதே ஆகும். கூதிர் காலத்து முகில்கள் மெல்ல நகரும் போது சந்திரன் கண்ணாமூச்சி ஆடுகின்றான். அச் சந்திரன் உலக அன்னையாகி மேகங்கள் என்னும் குழந்தைகளுடன் விளையாடிக்கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றியது. ஆச்வயுஜ மாதத்தில் சக்திக்கு அல்லவா முக்கியத்துவம்? 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம' த்தில் முதல் பெயர் 'ஸ்ரீ மாத்ரே நம:' (அன்னைக்கு வணக்கம்) என்று சகத்தினை ஈன்றவளின் பெயருடன் தானே தொடங்கி யுள்ளது ! இவை யாவும் இணைந்து 'ஸ்ரீ மாதா' வாக என் மனத்தினில் ஒரு கருத்து உருவாகியது. அவ்வளவே ! ஒரு வாரத்திலேயே எனது பிற அலுவல்களோடு கூட இச்சிறிய நூலும் உருப் பெற்றது.

இந்நூலில், சக்தியினைக் குறித்துச் சிறிதளவே என் னால் அறிமுகம் செய்ய இயன்றது. சக்தியினைப் பற்றிய பல முக்கியமான நூல்கள், உபநிடதங்கள், சாக்த ரகசி யங்கள், சாக்தத்தில் நிரம்பவும் முக்கியத்துவம் வாய்ந்த

* புரட்டாசி-ஐப்பசி (தமிழ்க் கணக்குப்படி).

விவரங்கள் ஆகியவை குறித்து இதில் நான் எழுத வில்லை. இனி வெளிவர இருக்கும் 'சக்தி வழிபாட்டின் சிறப்பு', 'மந்திர சாத்திரம்', 'தந்திர சாத்திரம்', 'ஸ்ரீ சக்ர ரகசியத்தின் அறிவு', 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமாவளி (மந்திர பாஷ்யம்)', 'காயத்ரி ரகசியம்', 'சாதனமார்க்கத்தில் சக்தி பீடங்கள்', 'ஜ்யோதி லிங்கங்கள் உபாசனை' என்னும் நூல்களில் அதிக விவரங்களைத் தர முயல்வேன். இச்சாக்த சித்தாந்தம், என் குருதேவரால் இயற்றப்பெற்று, பல மொழிகளில் வெளியிடப்பட்டுள்ள 'சர்வ சித்தாந்த சௌரபம்', * (The Vision and Voice of Indian Philosophy) என்னும் நூலின் ஒன்பதாவது (சைவம்) மற்றும் பத்தாவது (சாக்தம்) பகுதிகளில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

'ஸ்ரீ மாதா' நூலினை இலவசமாகவே அனைவருக்கும் வழங்கவேண்டும் என்பதே எங்களது யோக கேந்திரத்தின் நோக்கம். நூலை அச்சிடுதலின் செலவு மிகவும் அதிகமாகப் பெருகியுள்ளது அனைவருக்கும் தெரிந்திருப்பதே ஆகும். அதனால், நமது இந்த 'ஸ்ரீ மாதா' நூல் எல்லோருக்கும் இலவசமாகக் கிடைப்பதற்கு, தெலுங்கேயன்றிப் பிறமொழிகளிலும் இலவசமாகக் கிடைப்பதற்கு வாசகர்கள் பொருள் உதவிசெய்து, எங்களுடன் ஒத்துழைத்து ஸ்ரீ மாதாவின் அருளினைப் பெறுவர் என நம்புகிறேன்.

அன்னை தியாகீசானந்த புரி

பாபட்லா

இந்நூல் வெளியிட பொருளுதவி புரிந்த

ஸ்ரீ திருமலதிருபதி தேவஸ்தானத்தார்க்கு

எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்

மாதாஜி தியாகேசானந்த

---

* இந்நூல் 'சர்வ சித்தாந்த சௌரபம்' என்னும் தலைப்பில் தமிழில் வெளியிடப்படும்.

ஓம்

# ஸ்ரீ மாதா

## ஸ்ரீ சாரதா தேவ்யை நம:
## (ஸ்ரீ சாரதா தேவிக்கு வணக்கம்)

*யா தேவி ஸர்வபூதேஷு மாத்ருரூபேண ஸம்ஸ்திதா |*
*நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: ||*

*சரணாகததீனார்த்தபரித்ராணபராயணே |*
*ஸர்வஸ்யார்த்திஹரே தேவி நாராயணி நமோஸ்து தே ||*

*வித்யாவந்தம் யசஸ்வந்தம் லக்ஷ்மிவந்தம் ஜனம் குரு |*
*ரூபம் தேஹி ஜயம் தேஹி யசோ தேஹி த்விஷோ ஜஹி ||*

எல்லாப்பொருள்களிலும் தாய் உருவில் நிலைபெற்றுள்ள தேவியான அவளுக்கு வணக்கம், வணக்கம், வணக்கம்.

புகலடைந்தோரின் இடர்களை அகற்றுவதில் ஆர்வமுள்ளவளே, அனைவரின் துயர்களை அகற்றுபவளே, தேவி நாராயணி, உனக்கு வணக்கம்.

மக்களைக் கல்வியுடையோராகவும் புகழுடையோராகவும் பொருளுடையோராகவும் செய்வாயாக. நல்ல உருவத்தினையும் வெற்றியினையும் கீர்த்தியினையும் அருள்வாயாக. வெறுப்பினை அகற்றுவாயாக.

*'திவா பச்யதி நோலூக: காகோ நக்தம் ந பச்யதி |'*
*வித்யாவிஹீனோ மூடஸ்து திவா நக்தம் ந பச்யதி ||*

ஆந்தையினால் பகலில் பார்க்க முடியாது; காக்கையினால் இரவில் பார்க்க முடியாது. கல்வி யறிவில்லாத மூடன் இரவிலும் சரி பகலிலும் சரி பார்க்கமாட்டான். வித்தை அல்லது கல்வி எனில் அது என்ன? இதய அமைதிக்கு, சமூக அமைதிக்கு எது காரணமாய் உள்ளதோ, அதுவே கல்வி. அங்ஙனமாயின் கல்வியினால் எல்லாமே கிடைத்துவிடுமா? அத்தகைய கல்வி எது?

'த்வே வித்யே வேதிதவ்யே, பரா சைவாபரா ச' - பராவித்தை அபராவித்தை என வித்தை இருவகைப்படும். அபராவித்தை என்பதனால் உலகியல் இன்பங்கள் கிடைக்கும். ஆத்யாத்மிக வித்தை எனப்படும் பரா வித்தையினால் பிறப்பின்மை கிட்டும். எனவேதான், 'ஸர்வேஷாம் வித்யானாம் ஹ்ருதயமேகாயனம்' அதாவது, வித்தைகள் அனைத்திற்கும் இதயமே இருப்பிடம் என பிருஹதாரண்யக உபநிடதம் கூறுகின்றது. கல்வியினால் இதய மலர்ச்சி உண்டாக வேண்டும். மன விகாரங்கள் அழிய வேண்டும். விவேகத்தினைப் பெறவேண்டும். நல்ல பண்பாடு ஏற்படவேண்டும். அந்த நற் பண்பாட்டினால்தான் அழிவற்ற புகழ் கிடைக்கவேண்டும். கல்வி இல்லாவிடினும் பண்பாடு இருக்கக் கூடும். ஆயினும், கல்வி, பண்பாடு இரண்டும் சேர்ந்திருந்தால், அழகுள்ள மலருக்கு நறுமணமும் சேர்ந்தாற்போல், ஆநந்தம் பெருக்கெடுத்து உலக அமைதிக்குக் காரணமாகிறது.

இன்றைய உலகில் கல்வி இருந்தாலும் பண்பாடு குறைந்துள்ளது எனலாம். கல்வி வெறும் உத்தியோகத்திற்காக மட்டுமே என்னும் நிலையில் நல்ல பயன்களை அடைய முடியாமற்போய் விடுகிறது. குழப்பம் உண்டாகிறது. இன்றைய உலகப் போக்கினைப் பார்க்கும் போது அல்லது ஆராயும் போது பயம் உண்டாகிறது. இதற்கு என்ன காரணம் ? மனிதன் மனிதனாக, எஜமானன் எஜமானனாக, ஆசிரியர் ஆசிரியராக, மாணவர் மாணவராக இல்லாதது தான். தாய், பிள்ளைகள்; அண்ணன், தம்பிகள்; கணவன் மனைவி, எஜமானன், வேலைக்காரர்; மாணவர், ஆசிரியர், குரு, சீடர்கள்; தலைவர்கள் மக்கள் - இவர்களிடையே ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளும் உணர்வு குறைந்துபோய், தூயதாக இருக்க வேண்டிய தொடர்பு விலகியுள்ளது. தன்னலம் பெருகிவிட்டது. வன்மைப்போக்கு, வஞ்சனை, முறையற்ற வழியில் பணம் சேகரித்தல், பொறுப்பின்மை, பணிவின்மை, அரக்கவியல்பு, உலகியல் இன்பங்களுக்கான வேட்கை, ஒழுங்குணர்வு இல்லாதிருத்தல், எப்போது, எங்கு, எவருடன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை அறியாதிருத்தல், நமது பண்பாட்டினை மறந்து விடுதல் மற்றும் விமரிசத்தல், பிற நாடுகளின் கலாச்சாரங்களின் மீது மோகம் மற்றும் அவற்றைப் பின்பற்றுதல்

பெரியோர், சிறியோர் என்றும் வேறுபாட்டினை உணராதிருத்தல், பரிவு, தாட்சண்யம் முதலிய குறைந்தபட்ச மனித இயல்புகள் மறைந்து போதல், எதிர்த்தல், பயம் மற்றும் பக்தி என்பவை மறைந்து போதல், துயரப்போக்குடன் இருத்தல், ஒழுக்கக் கட்டுப்பாடு இல்லாமை போன்ற தீய இயல்புகள் பெரிதும் பெருகி, மனிதரிடம் அமைதியின்மையினையும் குழப்பத்தினையும் ஏற்படுத்துகின்றன. இவை பெருகிப்பெருகி, மனிதர்கள் மூலமாகச் சமூகத்தினுள் புகுந்து, உலகைப் பேராபத்தில் மூழ்கச் செய்கின்றன. வாழ்க்கை என்னும் மரத்தினை அழகிய மலர்களினாலும், இனிமையான பழங்களினாலும் நிரப்ப வேண்டிய மனிதன் அதை முள்செடிகளாகச் செய்து சமூகத்திற்குத் தீமை உண்டாக்குகிறான். முள்செடிகள் தாமாகவே வந்து எவரையும் குத்துவதில்லை. ஆனால், முள் போன்ற எண்ணங்கள் கொண்ட மனிதன் மட்டும் அனைவருடன் கலந்து திரிந்து அனைவருக்கும் தீங்கு செய்கின்றான். இங்ஙனம், சமூகத்திற்குத் தீங்கிழைப்பவர்களை என்ன வென்று சொல்லுவது? இது கல்வியின் விளைவா? அல்லது, கல்வியின்மையின் விளைவா? விலங்குகள் தாற்காலிகமாக ஒன்றோடு ஒன்று சண்டையிட்டுக் கொண்டாலும், அவை மீண்டும் ஒன்று சேர்ந்து வாழமுடிகிறது; ஆனால், இம்மனிதர்கள் மட்டும் வாழ்க்கை இறுதிவரை பகைமை பாராட்டுவதோடுகூட, பொறாமை, கோபம் முதலிய தமது இயல்புகளைத் தமது குழந்தைகளுக்குக் கூடத் தருகின்றனர் எனில், அதை என்ன வென்பது? உயர்ந்த உள்ளத்துடன், உயர்ந்த எண்ணங்களுடன், சீரிய ஒழுக்கத்துடன், உயரிய இலட்சியங்களுடன், நன்னடத்தையுடன், உயர்ந்த அனுபவம் நிறைந்து விளங்கும். குருவை அடைந்து, உத்தம சீடனாகி, நல்லோரிணக்கத்தினால் உயர்வினைப் பெற்று, உயரிய தவத்தினால் சிறந்த ஆன்மிக வாழ்க்கையின் சிகரங்களை அடைந்து, உயரிய பண்பாட்டிற்கு வாரிசாகி, உலகோரால் வணங்கத் தக்க பேறினைப் பெற்று, 'ஸர்வே ஜநாஸ் ஸுகினோ பவந்து' (மக்கள் யாவரும் சுகத்துடன் இருக்கட்டும்), 'கோப்ராம்மணேப்யோ சுபமஸ்து நித்யம்' (பசுக்களுக்கும் பிரம்மணர்களுக்கும் எப்போதும் நல்லதே நடக்கட்டும்) என்னும் வகையில் மனிதர்களுக்கு மட்டுமே அல்லாது, மனிதர்களின் உடல்நலத்திற்கு உபயோகமாகும் பால், நெய், வெண்ணெய் ஆகியனவற்றைக் கொடுத்து வரும் பசுக்கள் முதலாக மனிதர்களுக்கு இதய

அமைதியினை வழங்கும் பிரம்ம ஞானம் பெற்ற பெரியோர்கள் வரையில் எல்லோருக்கும் இன்பமும் அமைதியும் கிடைக்கவேண்டும் என்றும், மேலும், இவ்வுலக மாந்தருக்கேயல்லாது, 'லோகாஸ்ஸமஸ்தாஸ் ஸுகினோ பவந்து' (அனைத்து உலகங்களிலுள்ளவர்களும் இன்பமாய் இருக்கவேண்டும்) என்றும் கருதி வந்த நமது பரந்த பாரதப்பண்பாடு மற்றும் சம்பிரதாயம் என்னவாயின? தன்னலமும் நேர்மையில்லாத் தன்மையும் நிறைந்த இத்தகைய இயல்பு எங்கிருந்து வந்தது? 'வித்யா ததாதி வினயம்' - கல்வியினால் பணிவும் அடக்கமும் உண்டாகவேண்டும் என்பதற்கு மாறாக, 'வித்யா விவாதாய, தனம் மதாய' - கல்வி வீண் விவாதத்திற்கு, செல்வம் செருக்குடன் இருப்பதற்கு என்னும் அரக்க இயல்பினுக்கு ஏன் பணிந்து போக வேண்டியதாயிற்று? மிக உயரிய இலட்சியத்துடன், ஆன்மிக குருப்பீடத்தில் வீற்றிருந்து அனைவருக்கும் ஆன்மிக வித்தையினை வழங்கிய நமது நாடு இங்ஙனம் ஏன் இழிவு அடைந்தது? இதற்குக் காரணம் என்ன? 'இயமம்' என்னும் புலன்களின் கட்டுபாடு என்பது இல்லாது, மய சபையில் போல மாந்தர் இவ்வுலகில் நடமாடுகின்றனர். 'தமம்' என்னும் புற இந்திரியங்களின் கட்டுப்பாடு இல்லாது போய், மதம் அல்லது செருக்கு பெருகிவிட்டிருக்கின்றது. குருகுலங்களில், அமைதியான சூழ்நிலையில், நிர்மலமான ஆறுகளின் கரைகளில் வாழ்ந்து கொண்டும் உலக மேன்மைக்காக வேள்விகளைச் செய்து கொண்டும், தாம் கற்ற வித்தையை எத்தகைய ஆசைகளும் இல்லாமல், மாணவர்களுக்குக் கற்பித்துக்கொண்டும், ஜபம், தவம் ஆகியன செய்து கொண்டும் உலக வாழ்க்கை, ஆன்ம வாழ்க்கை இரண்டையும் சமப்படுத்தி ஒருங்கிணைத்தும் வந்த அந்நாளைய சிறந்த ஆசிரியர்கள் இப்போது இல்லாது போய்விட்டனர். அவர்களுக்குப் பதிலாக வெறும் குலங்களே எஞ்சிவிட்டனவோ! எந்த நற்குணங்களின் காரணமாக மனித இருதயம் என்னும் புலத்தினில் அமைதி ஏராளமாக விளங்குகின்றதோ, எந்த உழைப்பினால் பூமி பயிர்வளம் பெற்றுத் திகழ்கின்றதோ என்பதனை உணர்ந்து, சாமானிய மக்கள் முதலாக மோட்சத்தை விரும்புவோர் வரை அனைவருக்கும் தேவையான நற்பண்புகள் அனைத்தையும் நமக்கு நல்கியவை சாத்திரங்கள். பூகோளவியல், அண்டகோளவியல், வானவியல், மருத்துவம், விமானவியல், இசை, இலக்கியம், நாட

டியம், சிற்பம், ஓவியம் முதலிய எல்லாக் கலைகளையும் கற்றுக்கொடுத்து, அக் கலைகள் வாயிலாக இறைவனைக் கண்டு, அவ்வனைத்துக் கலைகளின் உருவாக விளங்கும் அந்த இறைவனுக்கு அக்க லைகளைச் சமர்ப்பித்து, பதி னாறு கலைகளையுடைய சந்திரனைப் போல் பிரகாசிக்க வும் என நமது நாடு எடுத்துக் கூறியது. தாய் தனது குழந்தைகளுக்கு சின்ன சின்னக் கதைகள் சொல்லி, உண வூட்டி, அவர்களின் உள்ளத்திற்கும் உடலிற்கும் வலிமை சேர்ப்பது போல், நமது வேத அன்னை கூட, தீயவழியி னில் சென்று தடுமாறுவோரை உயர்த்தி மேம்படுத்துவத ற்காக, கதைகள் வடிவிலும், வினாவிடை வடிவிலும், ஆசி ரியர் மாணவர் உரையாடல் உருவிலும் பல நல்ல விஷயங்களை மனிதர்களின் மனத்தில் பதியுமாறு நன்கு போதித்து வந்தாள்.

ஒரு சமயம் தேவர்கள், தானவர்கள், மனிதர்கள் ஓரி டத்தில் சேர்ந்தனர். பல விஷயங்களைப் பற்றிச் சர்ச்சை செய்தார்கள். ஒவ்வொருவரும் தமக்கு விஞ்சியவர் இல்லை என எண்ணினர். அவரவர்களின் குறைபாடுகளை எடுத்துச் சொல்லி, அவர்களைச் சன்மார்க்கத்தில் ஈடு படச் செய்யவேண்டும் என்னும் எண்ணம் இறைவனுக்கு உண்டாயிற்று. இறைவன் என்றால் அவன் அனைத்தை யும் அறிந்தவன் அல்லவா! ' உத்பத்தி ப்ரளயம் சைவ, பூதானாமாகதிம் கதிம், வேத்தி வித்யாமவித்யாம் ச ஸ வாச்யோ பகவானிதி ' - உற்பத்தி அல்லது ஆக் கல் மற்றும் பிரளயும் அல்லது ஒடுக்கல், பிராணிகளின் தோற்றம் மற்றும் மறைவு, வித்தை மற்றும் அவித்தை ஆகியவற்றை உணர்ந்தவன் இறைவன் என்பது வாயு புராணத்தின் கூற்று. எங்கும் வியாபித்திருக்கும் தன்மை யைச் சுட்டும் ஆகாயத்தினின்றும் ஓர் ஒலி தோன்றி யது. அதுவே இடி முழக்கம். அந்த இடி முழக்கம் 'த, த, த' என ஒலித்தது. அவ்வொலியினை அங்கிருந்த அனைவரும் கேட்டனர். நினைத்தாற்போல், அவர்களின் இதயத்தில் இதயச்சுழற்சி ஒன்று ஏற்பட்டது. உள்மனத் தில் ஓர் அலைவு எழும்பியது. ஆலோசனை கிளம்பியது. வியப்புடன் ஒருவரையொருவர் பார்த்தனர். அப்போது அமைதி அல்லது நிச்சப்தம் தோன்றியது. ஏதோ ஓர் அமைதி நிலை சூழ்ந்தாற்போல் இருந்தது. அனைவரும் அவரவர்களின் எண்ண ஓட்டத்தில் இலயித்து இருந்தனர்.

அப்போது, தேவர்களின் அரசன் எழுந்து நின்றான். "தேவர்களே, நாம் எல்லோரும் அந்த .ஒலியினைச் செவி யுற்றோம் அல்லவா! அவ்விடி முழக்கத்தின் ஒலி ' த, த, த' என்று சொல்வது போல் எனக்குத் தோன்றியது. இதன் பொருள் யாது? நாம் எல்லோரும் மனிதர்களைவி டச் சிறந்தவர்கள் எனக் கருதுகிறோம்; அகங்காரம் கூடக் கொள்கிறோம். பூவுலகினின்றும் வேள்விகள் செய்வதன் வாயிலாக நமது சுவர்க்கத்திற்கு வந்த மனிதர்களைக் கண்டு கர்வம் கொள்கிறோம். ஆயினும், நமக்கு நற் குணங்களோடு கூடத் தீய குணங்களும் உள்ளன. நமது சுவர்க்கத்தில் பல அப்சரசுகள் இருந்தாலும் கூட நமது மனம் சலனமடைகின்றது. பூவுலகிலுள்ள அழ கான மானிட மங்கையர்பால் நாட்டம் கொள்ளுகிறது. 'ந பரதாராம் கச்சேத்'- பரஸ்திரீயின் பால் செல்லக் கூடாது என்னும் சாத்திர வாக்கியம் தெரிந்தும், அறிவுச் சஞ்சலத்தினால் சாத்திரம் கூறுவதை மறந்து, மெய்மறந்து அவர்களை நாடிச் சென்று, சாபங்களைப் பெற்று வருகி றோம். எத்துணை நற்பண்புகள் இருப்பினும், அபிவிருத்தி எதுவும் இல்லை, வாழ்வின் மலர்ச்சிக்கு ஒழுக்கம் மிகவும் முக்கியமானது. புலன்களை வென்றவனுக்கு உலகனைத் தும் அடிபணிகிறது. அத்தகையோரின் அப் புலன்வெற்றி உலகத்தை ஆள்கிறது; ஒளி மிக்கதாகச் செய்கிறது. ஆனால், நமக்கு இல்லாதது அப் புலன்கட்டுப்பாடே. எனவே, 'தம இதி, தம இதி, தம இதி' - புலன்கட் டுப்பாடு, புலன்கட்டுப்பாடு, புலன்கட்டுப்பாடு, (வேண்டும்) என்று இம் முழக்கம் நமக்கு ஒரு செய்தியினை வழங் குவதாக எனக்குத் தோன்றுகிறது" என விவரித்தான். தேவர்கள் அனைவரும் தங்களது புலன்களின் கட்டுப்பாட் டின்மைக்காக வருந்தினர்.

பின்னர், தானவர்கள் மத்தியிலிருந்து தானவ அரச னும் எழுந்தான். "தானவர்களே! நாம் தேவர்களுக்கு இணையான சக்தி சாமர்த்தியமுள்ளவர்கள். அவர்களுடன் கூட நாமும் தீவிரமான தவம் செய்தோம். கடவுளை மகிழ்வித்தோம். கடவுளை நேரிடையாகக் கண்டோம். அநேக வரங்களைப் பெற்றோம். அந்த வரங்களின் அகங் காரத்துடன், அதிகார வேட்கையுடன் பலரை நோகச் செய்தோம். மகரிஷிகளையும் மகான்களையும் துன்புறுத் தினோம். நல்லோர்களுக்குப் பல இன்னல்களை உண்டாக்

கினோம். வரம் பெற்றதனால் ஏற்பட்ட செருக்கு, எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்னும் பகுத் தறிவினை அழியச்செய்தது. அதனால் கொடுமைக்குணம் அதிகமாயிற்று. நமது ஆற்றல்கள் யாவும் தீய வழிகளில் செலவழிந்தன. நமது சக்திகளை நல்லமுறையில் பயன் படுத்தினால், உலக மேன்மைக்கும், கெடுதலான வழிகளில் செலவழித்தால் பிரபஞ்ச அழிவிற்கும் வழி வகுக்கும் என் னும் இரகசியத்தை நாம் உணர முடியவில்லை. தேவர்கள் நல்லவர்கள் எனவும் நாம் எல்லோரும் அரக்கர்கள் எனவும் பெயர் பெற்றதனால் நமக்குத் தேவைப்படுவது தயை. நமக்குத் தயை இல்லாததனால் மகான்களின் தயையை நாம் அடையமுடியாது போயிற்று - 'தயேதி, தயேதி, தயேதி' 'தயை, தயை, தயை' எனத் தயையுடன் இருக் கவும் என்னும் நற் செய்தியினை இம்முழக்கம் நமக்கு வழங்குகிறது' என்று சொல்லி அமர்ந்தான்.

அடுத்து உடனே மனிதர்களின் இடையேயிருந்து ஒரு பேரரசன் எழுந்து தனது அபிப்பிராயத்தை இவ்வாறு விவரித்தான். "மனிதர்களே! இம் மானிடஜன்மம் தேவர்க ளுக்கும் தானவர்களுக்கும் மத்தியில் உள்ளது. நாம் தவம் செய்ய முடியும். மறுமையின்பங்களின்பொருட்டு இங்கே தானதர்மங்கள் செய்ய வேண்டும். "புத்ர காமேஷ்டினா புத்ரம், வாணிஜ்யாதினா வித்தம் ஜ்யோதிஷ்டோமேன ஸ்வர்கம். . . ." புத்திரகாமேஷ்டி யாகம் என்பதனால் புத்திரன், வணிகத்தினால் செல்வம், ஜ்யோதிஷ்டோமம் என்பதனால் சுவர்க்கம் கிட்டும் என முக்திகோபநிடதம் கூறுகின்றது. ஒவ்வொருவகைத் தானத்தினால் ஒவ்வொரு வகைப் பலன் ஏற்படுகிறது என்பது சாத்திரங்கள் கூறும் உண்மை. தானதர்மங்கள் செய்து, புண்ணிய உலகு அடைய விரும்பும் மனிதன் பிறந்ததிலிருந்து பணம் திரட்டுவதி லேயே ஈடுபடுகிறான். பணம் இல்லாதபோது இல்லையே எனவும், அது இருக்கும்போது, ' யாருக்காவது கொடுக்க வேண்டி இருக்குமே' எனவும், கள்வர்கள் அதைத் திருடிக் கொண்டு போய்விட்டால், 'போய்விட்டதே' எனவும் எப் போதும் மனிதன் துயரப்படுகிறான். எனவே, பணத்தாசை குறைய வேண்டும். தானம் செய்வதற்கான விருப்பம் அதிகரிக்க வேண்டும். நம்மிடம் உள்ள இந்தக் குறைபாட் டினை உணர்ந்த பகவான் 'தத்த இதி, தத்த இதி, தத்த இதி' 'கொடு, கொடு, கொடு' என்று இம் முழக்

கத்தின் வாயிலாக அறிவுறுத்துகிறான். இக்குறையினை நீக்கிக்கொண்டு, மானிடத்தன்மை பெற்று, எல்லா இன்பங்களையும் பெற வேண்டும் என விரும்புகிறேன்', என்று தன் மனத்தில் தோன்றிய கருத்துக்களை அவன் வெளிப்படுத்தினான். இதுவே உபநிடதம் கூறும் செய்தி எனக் கொள்ளலாம்.

இக்கதையில் கூறப்பட்டுள்ள, இந்திரியநிக்கிரகம் அல்லது புலன்கட்டுப்பாடு இல்லாத தேவரியல்புகள், தயை அல்லது இரக்கம் இல்லாத அரக்க எண்ணங்கள், தான தர்மம் அல்லது ஈகையறம் இல்லாத மனிதகுணங்கள் ஆகியன யாவும் இன்றைய உலகில் ஒரு மனிதனிடத்திலேயே மலையளவு பெருகி, கப்பும் கிளையுமாக விரிந்து, விழுதுவிட்டு, நன்கு ஊன்றிக்கொண்டு வலுவடைந்துள்ளன. பானையில் ஒன்றிரண்டு ஓட்டைகள் இருந்தால் அடைத்து விடலாம் ; ஆனால், பானை முழுவதும் ஓட்டைகளே இருந்தால் என்ன செய்ய முடியும்? அதேவிதமாக, ஒன்றிரண்டு குறைபாடுகள் இருந்தால், அவற்றைக் களைந்தெடுக்க முயற்சி செய்யலாமே யன்றி, எல்லாமே குறைபாடுகளாகவே இருந்தால் என்ன செய்ய முடியும்? மனிதனிடம் நூலறிவு, பூஜைகள், விரதங்கள், புனிதப் பயணங்கள், சமயச் சொற்பொழிவுகள், பக்தி, ஞானம் ஆகியன அனைத்தும் இருப்பதைப் போல் தோன்றினாலும், ஓட்டைக் குடத்தில் நீர் நில்லாமலிருப்பதைப் போன்றே, இவை யாவும் இதயத்தில் தங்கியிருக்க முடியாமலுள்ளன. நீதி, ஒழுங்கு, ஒழுக்கம், பணிவு, அன்பு ஆகியவை மாதிரிக்குக் கூட இல்லாமற்போய் விட்டனவே! இரக்கமின்மை, கடுமை, கொடிய மனப்பான்மை, துயருறுத்தல் தன்னிச்சையாகத் தலையெடுத்து உள்ளன அல்லவா! மனித மதிப்புகள் கருகிப் போய், சாத்துவிக குணங்கள் அடிமட்டத்திற்குச் சென்று விட்டன! இப்போதாகிலும், நமது மகரிஷிகள் நமக்கு வழங்கியுள்ள தமம் (புலன்களின் கட்டுபாடு), தயை (இரக்கம்,), தானம் (ஈகை) முதலிய குணங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து, அவற்றைக் கவசமாக அணிந்தவனிடம் அரக்கத் தன்மை நசித்து போகின்றது, மானிடம் மலர்ச்சியுறுகின்றது, தெய்வத்தன்மை களிகின்றது. பிரும்மத்தின் தன்மை கிடைக்கின்றது என உணரவேண்டும். இதில் ஐயம் ஏதுமில்லை. ஆயின், நமக்குப் பாதுகாப்புத் தருபவர் வேண்டும்.

உலகில் அனைத்திற்கும் இப்பாதுகாப்பு உள்ளது. கண் ணின் மணியினைக் கண் காப்பாற்றுகிறது? கால்களின் பாதுகாப்பிற்காக இருப்பவை பாதரட்சைகள். மழையிலி ருந்தும் வெய்யிலிலிருந்தும் பாதுகாப்புத்தருவது குடை. குளிருக்குப் பாதுகாப்பு அளிப்பவை துணிகள். குழந்தைக் குப் பாதுகாப்பு தாய். உலகிற்குப் பாதுகாப்புத் தருபவள் உலக அன்னை. இத்துணை பாதுகாப்புகள் இருந்தும் மனிதன் தனது மனதிறகுப் பாதுகாப்புச் செய்து கொள்ள முடியாமலிருக்கிறான். குழவிப்பருவம் முதல் தன்னுட லினைப் போஷித்து தன்னை ஆதரித்துவரும் அன்னை அளிக்கும் பாதுகாப்பு மனிதனுக்கு முதல் பாதுகாப்பு. அது இல்லாவிட்டால் வாழ்வே இல்லை எனலாம். ஆனால், இன்று தமது தாய்தந்தையரை எத்துணை பேர்கள் காப் பாற்றுகின்றனர்? அந்தப் பொறுப்பு தமக்கு உள்ளது என எத்துணை பேர்கள் உணர்கின்றனர்? 'மாத்ரு தேவோ பவ' (அன்னையே தெய்வம்) எனச் சொற்பொழிவுகளிலும் நூல்களிலும் அன்பும் கௌரவமும் பெருகி ஓடுகின்ற னவே தவிர, நிஜ வாழ்க்கையில் அவற்றிற்கு இடமில்லை என்பது அனைவருக்கும் தெரிந்ததே. பால் வற்றிப் போன பசுக்கள், வேலை செய்யமுடியாத எருதுகள், ஓட இயலாத குதிரைகள் ஆகியனவற்றை வெளியில் விரட்டிவிடுவதைப் போன்று, ஈவிரக்கமின்றி, வயது முதிர்ந்த பெற்றோர் களை விட்டுவிடுகின்றனர். ஆதரவற்ற அம்முதியோர்கள் எத்துணை வேதனை அடைகின்றனர்! தங்கள் இளம்ப ருவத்தில் தாய்தந்தையர் தங்களைக் கண்ணிமைகளைப் போல் பாதுகாத்து, வளர்த்து ஆளாக்கி, கல்வி புகட்டி அறிவாளிகளாகச் செய்யவில்லை என்றால் தங்களது இன் றைய நிலை என்ன வாகியிருக்கும் என்னும் எண்ணம் இவர்களுக்கு வராதா? இதுதான் முன்னேற்றப் பாதையா? உண்மையில், நாம் எதை நோக்கிச் செல்கிறோம், விலங் கியல்பினை நோக்கியா, அரக்கத்தன்மையினை நாடியா? மானுடத்தில் இறைப்பண்பினைப் பெற வேண்டிய மனி தனுக்கு ஏன் இந்த மாறான நிலைமை? கல்வியில் முதல் வகுப்பில் தேறிய இந்தியன் ஒருவன் அயல்நாட்டில் ஓர் உயர்ந்த அதிகாரி ஆனான். ஆறுமாதம் விடுப்பு எடுத் துக்கொண்டு, தனது மூத்த மகனுடன் இந்தியாவிற்கு வந்தான். பெற்றோர்களைச் சந்தித்தான். நல்லதொரு மனை வாங்கினான். நவீன வசதிகள் அனைத்தும் கொண்ட மாளிகை ஒன்றைக் கட்டினான். அதற்கு

'முதியோர் இல்லம்' என்று பெயரிட்டான். திறப்பு விழாவிற்குப் பெரிய ஆட்களை அழைத்தான். அனைவரும் அவனுடைய தருமசிந்தனையைப் பெரிதும் புகழ்ந்தனர். தொடக்க விழாவில் முதியோர் இல்லத்தைக் கட்டியவன் பேசுகையில் 'சகோதரர்களே! பெருமளவில் பணம் செலவழித்து, எல்லாவசதிகளுடன் இம் மாளிகை கட்டப்பட்டது என்பது நீங்கள் அறிந்ததே. மற்றுமொரு தியாகச்செயலையும் அறிவிக்கிறேன். முதலில் வயது சென்ற எனது பெற்றோர்களையே இவ்வில்லத்தில் சேர்க்கிறேன். இனி, நான் மட்டும் அமெரிக்கா செல்கிறேன்' என்று பணிவுடன் அனைவருக்கும் வணக்கம் செலுத்தினான். இனிமேல் தங்கள் மகன்களும்கூடத் தம்மை இவ்வில்லத்தில் சேர்ப்பார்கள் என்பதை மறந்து அவையினர் அனைவரும் விண்ணதிரக் கரவொலி எழுப்பினர். இத்தகு சமூகசேவை செய்வதற்கு அமெரிக்காவிலிருந்து வந்திருக்கும் தங்கள் நன்மகனின் சொற்களைக் கேட்ட அம் முதிய பெற்றோர்கள் வேதனையுடன் ஒருவர்முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர். உடனே, அம் முதியவர்களின் பேரன் எழுந்து, தனக்குத் தெரிந்த அரைகுறைத் தமிழில் 'எனது தந்தையை, இல்லை, எனது 'டாடி' யையும் பின்னால் இங்கேயே சேர்ப்பேன்' என்று சொன்னானாம். இங்ஙனம், மனிதர்களின் புத்தி வெறியுற்றுத் தலை விரித்தாடுகிறது. மேதைத்தனம் பெருகி, நாட்டில்துன்பத்தையும் குழப்பத்தையும் உண்டாக்குகிறது. இதயம் மூடிக்கொள்ளுகிறது. மனோவிஞ்ஞானம் அழிவிற்கு வழிகோலினால் மனிதனைக் காப்பாற்றுவது ஆன்மிக விஞ்ஞானமே யாகும் இயற்பியல் அறிவு வளர்ச்சியுற்று, ஆன்மிக அறிவு குறைவாக இருப்பதனால்தான் மனிதர்களுக்கு இவ்வளவு பிரச்னைகள். இப்பிரச்னைகளுக்குத் தீர்வு உள்ளதா? உள்ளது. பெரியோர்கள் கூறிய தீர்வுக்கான வழியினை உணர்ந்து, தனது அறிவினையும் சேர்த்து ஆலோசித்துத் தீர்வு காணவேண்டும். சொன்னபடி செய்யவேண்டிய பொறுப்பு மனிதர்களுடையது. எஜமானன் எஜமானனாக, குரு குருவாக, சீடன் சீடனாக, மாணாக்கன் மாணாக்கனாக, ஆசிரியர் ஆசிரியராக, சேவகன் சேவகனாகத் தத்தம் பொறுப்புகளை ஏற்காமல் தட்டிக்கழிப்பதே இத் துயர்கள் அனைத்திற்கும் மூல காரணமாகும்.

இறைவனின் படைப்பில் ஓர் ஒழுங்குமுறை இருப்பது

தெளிவாகிறது. உரிய காலங்களில் நேரம் தவறாது நிகழ்ந்து வரும் சூரிய சந்திரர்களின் உதயம் மற்றும் அஸ்தமனம், அந்தந்தக் காலங்களில் அந்தந்த மலர்கள் மலருதல், அந்தந்தக் காலங்களில் காய்கள் கனிகளாக மாறி மனிதர்களுக்குப்பயனுள்ளனவாக அமைதல் ஆகியவை யாவும் இயற்கையின் ஒழுங்குமுறைக்குட்பட்டு நிகழ்வன. இதைப்பார்த்து மனிதனும் தன்னுடைய வாழ்க்கையினை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டும். ஆனால், பெரியோர் களின் சொற்களைக் கேளாமல், ஒழுங்கு முறைப் பயிற்சி இல்லாத மனிதன், உலகிற்குப் பயன்படாது, பொருளற்ற, தன்னிச்சையான போக்கில், இயற்கைக்கு மாறானவற்றை ஆதரித்து, தானும் துன்புற்று, பிறரையும் துன்புறுத்து கிறான். இத்தகையோரே முன்னம் உலகத்திற்குக் கேடு விளைவிப்பவர்கள் எனப் பெற்றனர். இவர்கள் செய்யும் ஒழுங்கற்ற செயல்களினால் உண்டாகும் துன்பங்கள் மிகுதி யாகும் போது, தவறு செய்யும் குழந்தையினைத் தாய் தண் டிப்பதைப் போல், உலகங்களுக்கெல்லாம் தாயாக இருக்கும் அன்னை பராசக்தி அவதாரம் செய்கின்றாள். ஏன் எனில், உலகைக் காப்பது அவள் கடமையல்லவா? அவள் தனது பொறுப்புகளை ஒருநாளும் மறந்ததில்லை; எனவே, தீயோ ரைத் தண்டிக்கின்றாள். நல்லோரைக் காக்கின்றாள். நல்ல மனிதர்களைக் காப்பாற்றுகின்றாள். பக்தர்களின் பிரார்த்த னைகளுக்குச் செவி சாய்த்து, தன்னை அன்னையாகப் பாவித்து ஆராதிப்பவர்களைத் தாயன்புடன் தனது மடி யில் எடுத்துக்கொள்கின்றாள். அவர்களின் அனைத்து நலன்களையும் அவள் கவனித்துக் கொள்கின்றாள். அன்பு அமுதத்தைப் பொழிகின்றாள். ஆனந்தத்தை வழங்கு கின்றாள். பிறப்பின்மையினை அருளுகின்றாள். அவள் தனது பொறுப்புகளை முறைப்படி, இடரின்றி நிறைவேற் றுகின்றாள். அவளே ஸ்ரீ மாதா, அனைத்துலக அன்னை! மாசில்லாத மூர்த்தியான அவ்வன்னையின் ஆராதனையே நமக்குச் செல்வத்தினையும் வலுவினையும் அளிக்கின்றது. 'சக்திஞானம் விநா தேவி நிர்வாணம் நோபலப்யதே' - சக்தியின் அறிவு இல்லாவிட்டால் மோட்சம் அல்லது வீடுபெறல் என்பதை அடைய முடியாது என அடித்துக் கூறுகின்றது 'மஹா நிர்வாண தந்த்ரம்' என்னும் நூல் - அச்சக்தியின் பரிவார்ந்த பார்வையினால்தான் எல்லா நற் குணங்களின் சேர்க்கையும் மனிதனுக்குக் கிடைக்கின்றது. அமைதியின்மை முற்றிலும் அகன்று, அமைதி கிட்டுகின்

றது. எங்கும் எதிலும் அமைதி. அந்தச் சக்தியே உடலின் சக்தியாகி, ஆயுத சக்தியாகி, தாமஸ, ராஜஸ, சத்துவ சக்தியாகி, மனச் சக்தியாகி, ஆதிபௌதிக, ஆத்யாத்மிக சக்தியாகி, யா தேவீ ஸர்வபூதேஷு சக்தி ரூபேண ஸம்ஸ்திதா' (எல்லாப் பொருள்களிலும் சக்தி உருவில் உள்ளவளே) என்றவாறு சர்வசக்தியாகப் போற்றபடுகிறது 'சப்தசதி' என்னும் நூலில். அந்த சக்தியே உலகத்திற்கு ஆதாரமாயிருப்பவள்! அவளே உலக அன்னை! அவளே ஆதிசக்தி! அவளே பராசக்தி! உலகிலுள்ள ஒவ்வொரு வரும் அப் பராசக்திக்கு, அப் பராத்பரிக்கு வணக்கம் செலுத்தவேண்டியதுதான்! சக்தியில்லாதவன் உலகில் இல்லையன்றோ!

மனித வாழ்க்கை நித்தியமில்லாதது, உண்மையில்லா தது, நிலையற்றது. ஆனால், அழியும் இவ்வுடலில் உள் ளார்ந்து அமைந்து, உயிர்ப்புடன் கூடி, அணு உருவில் உள்ள அந்த ஆதிசக்தி எங்கும் வியாபித்து, பெரிதினும் பெரிதாகி, உண்மையாகி, நிலையாகித் திகழ்கின்றது. இக்கருத்தினை 'அணோரணீயான், மஹதோ மஹீயான்' (அணுவிலும் சிறியது, பெரிதினும் பெரியது) என உபநி டதங்கள் நன்கு விளக்கின. அந்த சக்திக்குத்தான் மதிப்பே அன்றி இந்த உடலுக்கு இல்லை. இரதத்தில் தேவன் இருந் தால் தான் இரதத்திற்கு மதிப்பு. அங்ஙனமே, இவ்வுடல் என்னும் இரதத்தில் அந்தத் தெய்விக சக்தி இடம் கொண் டால்தான் மதிப்பு. பழக்கப்படுத்தப் படாத குதிரைகளினால் இரதத்திற்கு விபத்து ஏற்படுவது போன்றே இவ்வுடல் எனும் இரதத்திற்கும் கட்டுப்பாடற்ற புலன்களே குதிரைக ளைப் போல் மனிதனை விபத்திற்கு இட்டுச் செல்கின்றன. மேலும், அநித்தியத்தில் நித்தியமாகவும், உலகியல் முறை யிலே உலகியல் இல்லாத வகையிலும், சத்தியமில்லாதத னிடை சத்தியமாகவும், ஒலியினிடை ஒலியில்லாமலும், குழப்பத்தினிடை அமைதியாகவும், நிலையில்லாததனிடை நிலையாகவும், அஞ்ஞானத்தினிடை ஞானத்துடனும் வாழ வேண்டும் எனில் எவரை அண்ட வேண்டும்? எத்தகைய வித்தையினைப் பெறவேண்டும்? புலன்களுக்கப்பாற்பட்ட, அடையமுடியாத, அநுபவத்தினால்மட்டுமே அறியக்கூடி யதான, ஆனந்தத்தின் இருப்பிடமான ஆதிசக்தியினிடம் புகலடைவதைத் தவிர வேறு வழி யில்லை. பராவித்தை யினைப் பெறுவதைத் தவிர்க்க முடியாது. வரையறுக்க

முடியாத அந்தச் சக்தியினை ஆணாகவோ, பெண்ணா கவோ பாவித்துக் கொள்வது மனிதனின் மனச் சக்தி யைப் பொருத்திருப்பதாகும்.

பொதுவாக, எந்தப் பிராணிக்கும் முதல் தொடர்பு தாயினுடையதாகத்தான் இருக்கும். தந்தையை விடத் தாயினிடமே அதிகமாக அன்பு செலுத்துவர். இதற்குக் காரணம், இதயத்தன்மை மிகுந்திருப்பது பெண்ணேயாகும். எனவேதான், இராமபிரானிடம் முறையிட்டு அயர்ந்து போன பக்தர் இராமதாஸ் 'நநு ப்ரோவமனி செப்பவே ஸீதம்ம தல்லி' (அம்மா சீதையே, என்னைக்காப்பாற்றும் படி சொல்லவும்) என்று, கருணையின் உருவான, ஜனக மன்னனின் அன்புமகளான ஜானகியன்னையிடம் முறை யிட்டுக் கொண்டார். அங்ஙனமே, தசரதராமனைப் போற்றிப்புகழ்ந்து, தமது கீர்த்தனைகளால் மகிழ்வித்து, 'ஸீதம்ம, மாயம்ம' (அன்னை சீதை எனது தாய்) என அனுக்கம் பெற்றார் தியாகராஜசுவாமி. 'அம்மா' என வாய் நிறையச் சொல்லும்போது இருக்கும் இனிமை மற் றும் இன்பம் பிறிதொரு சொல்லிலே இல்லையோ எனத் தோன்றுகிறது. எனினும், இந்நாளில் 'அம்மா' என்று அழைத்தாலும் அவ் வழைப்பு பண்பற்றதாகக் கருதப்படுகின்றது. இன்று 'மம்மி' என்னும் அழைப்பி னால், எல்லாம் 'மம்மி' மயமாகி உள்ளது. ( 'மம்மி' என்னும் சொல்லின்பொருளை அறிந்துகொண்டால் அம் மாதிரி அழைக்கமாட்டார்கள்.) 'ஓம் நமச் சிவாய' எனக் கல்விப்பயிற்சியின் தொடக்ககால வித்தையினை மறந்து போய்விட்டோமோ என்னவோ! நமது வித்தையினை, பண்பாட்டினை விட்டுவிடாது, பல வித்தைகளையும் பண் பாடுகளையும் கற்றுக்கொள்வது நல்லது எனத் தோன்றுகி றது. வித்தையில் விவேகம் அல்லது பகுத்தறிவை மனம் வெளிக்கொணருமாயின், நாம் செயல்கள் புரியும்போது மகிழ்ச்சி கிடைக்குமாறு செய்கிறது இதயம். மனம், இதயம் இவற்றின் இந்த இணைவே மனிதவாழ்க்கையின் குறிக் கோள். இவ்விரண்டின் சேர்க்கை மனிதவாழ்க்கைக்கு ஓர் ஊட்டத்தையும் நிறைவையும் அளிக்கின்றது. அம் மனம் சிவன் என்றால், அவ் விதயம் பார்வதியாக, அம் மனம் நாராயணன் என்றால், அவ் விதயம் நாராயணியாக, அம்மனம் பிரம்மா என்றால் அவ்விதயம் சரஸ்வதியாக மலர்ந்தது. அநுபவத்தோடு கல்வி ஒன்றியிணைய வேண்

டும். கல்வி மனத்தினுடையது; அநுபவம் இதயத்தி னுடையது. இதுவே அர்த்தநாரீச்வர தத்துவம். மனம், இதயம் இவற்றின் சேர்க்கையின் வாயிலாக அர்த்தநாரீச் வர தத்துவம் ஏற்படவேண்டும். அப்போது உண்மையான ஆனந்தம் உண்டாகின்றது. இதன் முடிவுநிலை, மனத்தை விட இதயம் மென்மையாக, எழிலார்ந்ததாக, அமைதியு டையதாக, கவர்ச்சியுள்ளதாக இருக்கும் என்பது இதன் பொருள். ஆகவேதான், அத்திவ்விய சக்தியினை சிலர் ஆண் உருவிலும் சிலர் பெண் உருவிலும் வழிபட்டனர். அவ்வாணுருவை உலகத் தந்தை எனவும் அப்பெண்ணுருவை உலக அன்னை எனவும் சிலர் பாவித்தனர். அவ்வு லகத் தந்தையைச் சிவனாக எண்ணியவர்கள் சைவர்கள் ஆயினர்: விஷ்ணுவாகக் கருதியவர்கள் வைஷ்ணவர்கள் ஆயினர். மற்றும் சிலர் அவரைக் கணபதியாக எண்ணிக் காணாபத்தியர்கள் ஆயினர்; சக்தியாக வழிபட்டுச் சாக் தர்கள் ஆயினர். அவளே அனைத்துத் தேவதைகளினுள் இருக்கும் உருவாகி, அனைத்தின் சிருஷ்டி, ஸ்திதி, இலயம் எனப்படும் படைப்பு, காத்தல், மறைவு ஆகியவற்றிற் குக் காரணமாகி, பக்தர்களின் இதயத்தில் வீற்றிருக்கும் தேவதையாகி, முக்தி தருபவளாகி 'யதா யதோபாஸதே ததேவ பவதி' (எப்படி எப்படி உபாசிக்கிறாரோ அப்ப டியே ஆகின்றது) என்னும் முறையில், அநேக உருவங்க ளைப் பெற்று, பல்வேறுவகைப் பக்தர்களைக் காப்பாற்றி, சக்திபூஜைக்கு நீர்பாய்ந்த நிலமாயிற்று. அந்த சக்தியே ஸ்ரீ மாதா.

அவ்வன்னை மூன்று குணங்களை ஏற்று, திரிகுணாத் மகமாக (முத்தன்மையுடையவளாக) ஆகியது அடியார்க ளைக் காப்பதற்காகவே. மேலும், முக்குணங்களைப் பெற் றுள்ள மனிதனின் சாதனை கூட முக்குணங்களை உடையதாகவே நடைபெறுகின்றது. அந்தந்தக்குணங்க ளுக்கு ஏற்ற உருவங்களை ஏற்கின்றாள் அவ்வன்னை. இவ்விவரங்களை 'சப்தசதி' நூல் 'யா தேவீ ஸர்வ-பூதேஷு விஷ்ணு மாயேதி சப்திதா, நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:' எல்லாப் பொருள்களிலும் விஷ்ணுமாயை என்று அழைக்கப்படும் தேவிக்கு வணக்கம், வணக்கம், வணக்கம் என இரண்டு சுலோகங்களில் விவரித்துள்ளது. இச்சுலோகங்களில் அவ ளின் முக்குணத்தன்மையுள்ள உருவம் புலப்படுகிறது.

'யா தேவீ ஸர்வபூதேஷு விஷ்ணுமாயேதி சப்திதா' என்றவாறு, விஷ்ணுமாயையில் துவங்கி, உயிர்ப்பு, உறக்கம், பிரமை, பசி, நிறம் என்னும் வடிவில் தமோகுணம் மேலிட்டிருப்பவர்களுக்கு சக்தி உருப்பெற்றுக் காட்சியளிக்கின்றாள். இது அச்சக்தியின் ஸ்தூல வடிவம் அல்லது பருஉருவம். 'யா தேவீ ஸர்வபூதேஷு விஷ்ணுமாயேதி சப்திதா' என விஷ்ணுமாயையில் ஆரம்பித்து, உயிர்ப்பு, நிறம், சக்தி அல்லது ஆற்றல், வேட்கை, ஜாதி, வெட்கம், செல்வம், தொழில் என்னும் வடிவில் ரஜோகுணம் மேலிட்டவர்களுக்குக் காட்சி யளிக்கின்றாள். இது அவ்வன்னையின் சூட்சும வடிவம். இந்த ரஜோகுணம் அதிகமானால், பொறாமை, காமம், குரோதம், முதலிய தீய இயல்புகள் உண்டாகின்றன. இவற்றால் தகராறுகள் ஏற்படுகின்றன. இதயத்தில் அமைதியின்மை, வீட்டில் அமைதியின்மை, சமூகத்தில் அமைதியின்மை: எங்கு சென்றாலும் இவ்வமைதி யின்மை யினை விடமுடியாமல் அவ்வமைதியின்மையுடனேயே திரும்பி, அருகிலுள்ளவர்களிடமும் இவ்வமைதியின்மையைத் தோற்றுவிக்கின்றனர் இம்மாதிரியான மனிதர்கள். மூன்றாவதாகிய சத்துவ குணத்தில் 'யா தேவி சர்வபூதேஷு விஷ்ணு மாயேதி சப்திதா' என்றவாறு விஷ்ணுமாயை உயிர்ப்பு, நிறம், ஆற்றல், அறிவு, நினைவு, ஈடுபாடு, அமைதி, பொறுமை, ஒளி, இரக்கம், நிறைவு ஆகிய அன்னை வடிவமாகிப் பொலிவுற்று விளங்குகிறது. இது அவளது அமைதி உருவம்; இது அவ்வன்னையின் அன்பு வடிவம்! இரக்கத்தின் வடிவம்! பொறுமையின் வடிவம்! தாயன்பின் உருவம்! நிரம்பவும் சூக்குமமான வடிவம்! புலன்களை வென்றவர்களுக்கு, தூய்மைநிலை அடைந்தவர்களுக்கு, உள்நோக்கிய பார்வை உடையவர்களுக்கு அனுபவத்தினால் அறியக்கூடியது. அதனால்தான், 'அந்தர்முகஸமாராத்யை நம: (உள்நோக்கிய பார்வை உடையவர்களினால் ஆராதிக்கப் பெறுபவளுக்கு வணக்கம்) என 'லலிதா ஸஹஸ்ர நாம'த்தில் ஒரு நாமம் காணப்படுகிறது. சத்வகுணம் மேலிட்ட இவர்கள் அனைத்து நற்பண்பு களுடனும் கூடியவர்கள். பத்தரை மாற்றுப் பொன் போன்றவர்கள். நிரம்பவும் மேன்மையானவர்கள். அமைதியான இதயமுள்ளவர்கள். தம்மிடமுள்ள அமைதியினை அனைவருக்கும் வழங்குபவர்கள். இங்ஙனம் முக்குணங்களுடன் கூடிய அவ்வன்னை முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவ

ளாய் ஆன்ம ஞானிகளால் மட்டுமே அறியப்படுவளாகவும் விளங்குகிறாள். எனவே, தமோ குணம் மேலிட்டவர்கள் அதை அடக்கி 'எனது' என்னும் பாவனையை அகற்றிய வர்களாக ஆக வேண்டும். ரஜோ குணம் மேலிட்டவர்கள் அக்குணத்தைக் கட்டுப்பாட்டிற்குள் கொணர்ந்து 'நான்' என்னும் செருக்கினை விட்டவர்களாக ஆக வேண்டும். சத்துவகுணம் நிரம்பியவர்கள் மாசற்ற நிலையில் பிர காசித்து, பக்தர்களாகவும் ஞானிகளாகவும் ஆகவேண்டும். இது வழிபாட்டு முறை. அன்னையின் அனுக்கிரகமின்றி மாந்தர்கள் எதுவும் செய்யமுடியாது என்பது தெளிவு.

விலங்குகளைவிட மனிதனுக்கு அதிக அளவு வாக்கு, புத்தி ஆகியவற்றைப் படைப்புக் கடவுள் நல்கியிருக்கி றார். மனிதன் தன் அகத்தே உண்டாகும் எண்ணங்களை வாக்கின் வாயிலாக வெளிப்படுத்துகிறான். புத்தியைப் பயன்படுத்தி புண்ணியம், பாவம் தருமம், அதருமம் இவற் றுக்கிடையேயுள்ள வேறுபாட்டினை உணர்கிறான். எனவே தான் 'தர்மோ மூலம் மனுஷ்யாணாம்' - மனிதர்களுக்குத் தருமமே அடிப்படை எனக் கூறுகின்றது சாத்திரம். அது மட்டுமன்று, வாக்கு இருப்பதனால்தான் 'ஸத்யம் வத' - உண்மையே பேசு என்றும், புத்தி இருப்பதனால்தான் 'தர் மம் சர' - தருமம் செய் என்றும் வேத அன்னை மனிதனுக்கு ஆணையிட்டுள்ளாள். 'தர்மம் வத' - தருமத்தை சொல் என்று இல்லை. எப்போதும் தருமத்தைப்பற் றிப் பேசிக்கொண்டும், தருமத்தை உபதேசித்தும் ஆனால், தருமத்தின்படி நடக்காமலும் இருப்பவனுக்கு 'தர்மம் சர' - தருமம் செய் என அவள் நன்கு எடுத்துச் சொல் லியிருக்கிறாள். படிப்பது வேறு, உபதேசிப்பது வேறு, கடைப்பிடித்து நடப்பது என்பது வேறு. தருமத்தை நடை முறையில் செய்யாவிட்டால், மோட்சம் இல்லை. ஆகவே தான், நான்கு புருஷார்த்தங்களுள் அல்லது பேறுகளுள் தருமம் அல்லது அறம் என்பதற்கு முதலிடம் தந்தனர். தருமம் இல்லாது எவருடைய வாழ்க்கையிலும் முன்னேற் றம் ஏற்படாது. இது ஒரு பேருண்மை. தருமத்தைச் செய்து மோட்சத்தைப் பெற வேண்டும். இயற்கையும் கூட தருமத்திற்கே முதலிடம் அளித்துள்ளது. ஆண்டிற்குப் பன் னிரண்டு மாதங்கள். அவற்றுள் முதலாவது சைத்ரமாதம்.

'சைத்ரசுக்ல ப்ரதிபதி வத்ஸராரம்ப:'* சைத்ரமாதம் வளர்பிறை முதல்நாள் பிரம்மா படைப்பைத் துவக்கினார் என்பது 'நிர்ணயஸிந்து' என்னும் நூலின் கூற்று. அதாவது, அன்று 'யுகாதி' என்று பொருள். வளர்பிறை முதல் நாளிலிருந்து 'வஸந்த நவராத்திரி' விழா ஆரம்பம். சைத்ரமாதம் வளர்பிறை ஒன்பதாவது நாள் 'ஸ்ரீ ராம நவமி'; அன்றோடு 'வஸந்த நவராத்திரி' முடிவடைகிறது. மரங்கள் யாவும் பழைய இலைகளை உதிர்த்து, புதிய கொழுந்துகள் விட்டு, அதன் பின்னர் மலர்ந்து மகிழ்ச்சியினை ஏற்படுத்தும். தங்களுக்குரிய தருமத்தை அவை கடைப்பிடிக்கின்றன. ஸ்ரீராமர் பிறந்த மாதம் சைத்ரம். 'ராமோ விக்ரஹவான் தர்ம:' - இராமர் தருமத்தின் உரு என வால்மீகி முனிவரால் போற்றப்பட்ட இராமர் தர்மஸ்வரூபி, சத்தியசந்தன், பித்ருவாக்கிய பரிபாலனத்தில் முன்னிற்பவன். தருமத்தைக்கடைப்பிடிப்பதே தமது வாழ்வின் இலட்சியம் எனப்பாவித்து, அதை நடைமுறையில் கடைப்பிடித்துக் காட்டிய ஸ்ரீராமர் பிறந்த மாதம் ஆகையால், சைத்ரமாதம் தர்மத்தின் மேன்மையினை வலியுறுத்திக் கூறுவதாயுள்ளது எனச் சொல்லலாம். 'யதோ தர்மஸ் ததோ ஜய:' - தருமம் இருக்கும் இடத்தில் வெற்றி கிடைக்கும். ஆதலால், மனிதன் அறநெறியில் ஒழுக வேண்டும். தருமத்தினால் நிறைந்தவனாக இருக்கவேண்டும். தருமத்தினால் கனிய வேண்டும். அதனால்தான், இந்த 'வஸந்த நவராத்திரி' தருமத்தை வலியுறுத்துகின்றது. பத்து அவதாரங்களுள் மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம அவதாரங்கள் அர்ச்சனாவதாரங்களாக இருக்கையில், இராமவதாரம் முதலான அவதாரங்கள் பின்பற்றப்பட வேண்டிய அவதாரங்களாயுள்ளன. முழுதும் தருமத்தைப் பேணுபவரான இராமரை, அவருடைய எடுத்துக்காட்டை எல்லோரும் பின்பற்ற வேண்டும்! தருமத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதே இராமரின் ஆணை. எனவே, சைத்ர மாதத்தை தருமத்தை வலியுறுத்தி அறிவுறுத்தும் மாதம் எனக் கொள்ளலாம்.

---

* சாந்திரமான அல்லது சந்திரனின் இயக்கத்தை அடிப்படையாகக்கொண்ட கணக்கின்படி சைத்ரமாதம் வளர்பிறை முதல் நாள் வருடப்பிறப்பாகும் - மொழிபெயர்ப்பாளர்.

* பாத்ரபத மாதத்தில் வருவது கணபதி நவராத்திரி கணங்களுக்குப் பதி அவன். கணங்கள் என்றால் இந்திரியங்கள் (பொறிகள்); அவற்றிற்குப் பதி அல்லது தலைவன் ஆகையால் கணாதிபதி என வழிபாடு பெறுகிறான் விநாயகன். பிரம்மசாரியாகப் புகழடைந்தவன். பிரம்மசரியத்தினால் புத்தி மலர்ச்சியுற்று, சித்தி ஏற்படுகிறது என்பது பொருள். புத்தி, சித்தி ஆகியவை அவனுடைய சக்திகள். நாற்கால் பிராணிகளுள் ஆனை நிரம்பவும் பெரியது; மூஞ்சூறு அல்லது எலி மிகவும் சிறியது. விநாயகரை மூஷிக (எலி) வாகனன் என்கிறோம் அல்லவா! அதன் பொருள் யாது? பருவுடல் பெற்றாலும் சூட்சும புத்தியுடன் நுண்ணியதை உணர்வதாக ஆக வேண்டும் என்பதை ஆனையும் எலியும் நமக்குப் போதிக்கின்றன. தவிரவும், யோகசித்தாந்த நோக்கில், ஆறு ஆதார சக்கரங்களுள் முதலாவதான மூலாதார சக்கரத்தில் அமர்ந்துள்ள கணபதி முதலிடம் பெறுகிறார். அதுமட்டுமின்றி, ஐந்து பருப்பொருள்களினாலான இப்பருவுடலோடு கூட, சூட்சுமப்பொருள்களான ஐந்து தன்மாத்திரைகளை சூட்சுமபுத்தியினால் உணர்ந்து பருப்பொருள், நுண்பொருள் ஆகியவற்றிற்குக் காரணமான பகவானைப் பக்தியுடன் வணங்கவேண்டும் என்பதும் பொருளாகும். புலன்களின் மீதான வெற்றி கிட்டினால் அன்றி, சூட்சும புத்தி அல்லது நுண்ணறிவு மலர்ச்சி அடையாது. அறிவுத்திறனின் மலர்ச்சி ஏற்பட்டால் அன்றி விவேகம் அல்லது பகுத்தறிவு உண்டாகாது. பகுத்தறிவு உண்டானால் அன்றி விராகம் அல்லது பற்றின்மை வராது. வைராக்யம் வந்தால் அன்றி மோட்சம் கிடைக்காது. மோட்சத்தினால் அன்றி தூய ஆனந்தம் கிட்டாது. இவை யாவும் இந்திரிய நிக்கிரகம் அல்லது புலன்கட்டுப்பாட்டினுள் அடக்கம். தருமத்தை இந்தப் புலன்கட்டுப்பாட்டினால் நிலையாகப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்பது கருத்து. இப்புலன்கட்டுப்பாட்டு உருவில் கணபதி நவராத்திரி விழா பாத்ரபத மாதத்தில் தோன்றியது.

அதன்பின்னர்,* ஆச்வயுஜ மாதத்தில் தொடங்குவது

---

* தமிழ் வழக்குப்படி ஆவணி-புரட்டாசி. - மொழிபெயர்ப்பாளர்.

* தமிழ் வழக்குப்படி புரட்டாசி - ஐப்பசி - மொழிபெயர்ப்பாளர்.

தேவி நவராத்திரி. தேவி என்றால் ஜகன்மாதா அல்லது அகில உலகிற்கும் அன்னை. அவள் பூஜையுடன் இந்த நவராத்திரி ஆரம்பமாகிறது. அன்னையின் அனுக்கிரகம் இருந்தால் அனைத்தும் சாத்தியமே. எனவேதான், வேதம் கூட 'மாத்ருதேவோ பவ' - அன்னையே தெய்வம் என அன்னைக்கே முதலிடம் வழங்கியது. ' ந மாது: பரதை வதம்' - அன்னையன்றி வேறு தெய்வம் இல்லை எனத் தாய்க்கே முதல் இருக்கை அளிக்கப்பட்டது. 'லலிதாஸ ஹஸ்ர நாம'த்தில் 'ஸ்ரீ மாத்ரே நம:' என்று முதல் பெயர் அவளுடையதே. எதற்காக இவ்வளவு முக்கியத்து வம்? அன்னைக்குள்ள புனிதமான இடம் உலகில் வேறு எவருக்கும் இல்லை. அன்னையினின்றும் தோன்றிய இப் பவித்திரமான பாவத்துடன், உபநயனத்தின்போது உபதே சிக்கப்படும் காயத்ரீ மந்திரத்தை அனுட்டித்து, நிலைப்பு நிலையினைப் பெற்று, குருகுல வாசத்தின் போது குருபத்தினியைத் தாயாகக் கண்டு, அவளின் வாத்சல்ய அன்பினைப் பெற்று, அதன்பின்னர் தேவி வழிபாட்டில் அவளை உலகத்தின் அன்னையாக வழிபட்டுப் பேறு பெறுகிறான் சாதகன். புனிதத்தில் முதல் பரிசைப் பெற்ற வர்களுக்கே உலக அன்னையின் தரிசனம் தவறாது கிடைக் கிறது. பவித்திரமான பார்வை, புனித வேதாத்தியயனம், புனித சிரவணம், புனித பாவனைகள் ஆகியவற்றுடன், புனிதமான குருவின் முன், தூய உடலுடன் சாதனை செய்தவருக்கு எல்லாம் கிடைக்கும் என்பதில் ஐயம் ஏது மில்லை. அத்தகைய புனித உடல்களைப் புனிதமற்றவர்கள் தொட்டால், அவ்வுடல்கள் தவித்துப் போகும். பெரியோர் களின் வாழ்க்கையில் இதை நாம் பார்க்கக் கூடும். இப் பவித்திரமான பாவனையினை நமக்கு வழங்கிய அன்னை நம்மை ஈன்றெடுத்த தாய். அவளிடமிருந்து ஆரம்பித்த இத்தூய்மை உலக அன்னையைச் சேர்ந்து அவளில் இல யித்துவிட வேண்டும். இப் பவித்திரத்தன்மை பராகாஷ்ட நிலையினை, அதாவது, உச்ச நிலையினை இச் சாக் தத்தில் அடைகின்றது. உலக அன்னையின் அருளுடன், புலன்கட்டுப்பாடுடன், தருமத்தினால் கட்டுப்பட்டவனாக, தருமத்தில் ஆர்வமுள்ளவனாக, தருமஸ்வரூபியாகி, தருமத் தைப் போதிப்பவனாக மனிதன் ஆகவேண்டும்.

இவ்வாறு, சைத்ரமாதம் வளர்பிறை முதல் நாளிலி ருந்து நவமி (ஒன்பதாவது நாள் ) வரைக்கும் வஸந்த நவராத்திரியாகவும், பாத்ரபத மாதம் வளர்பிறை சதுர்த்தி யிலிருந்து துவாதசி வரை கணபதி நவராத்திரியாகவும், ஆச்வயுஜ மாதம் வளர்பிறை முதல் நாளிலிருந்து நவமி வரை சரத்கால நவராத்திரியாகவும் பிரசித்தியடைந்த இம் மூன்று நவராத்திரிகளும், தருமத்தைப் பின்பற்றுதல், புலன் கட்டுப்பாடு, தேவிவழிபாடு ஆகியவற்றால் சாதகனின் முன்னேற்றத்திற்கு மூலகாரணமாகின்றன. இந்த நவராத் திரிகள் வளர்பிறையில்தான் தொடங்குகின்றன; மகிழ்ச் சியூட்டும் சந்திரன் இருக்கும்போது நிறைவடைகின்றன. சாதகனும் கூட, பதினாறு கலைகள் கொண்ட சந்திர னைப் போன்றே பிரகாசிக்க வேண்டும் என்பது கருத்து. சிவனின் தலையணியாகச் சேர்ந்து தண்ணரிய வெண் ணிலவினைப் பொழியும் சந்திரனைப் போன்றே, உலக அன்னையின் அருள் மற்றும் ஆசிகளின் பலத்துடன் ஆன்மிக உயர்வு பெற்ற மகான்கள் கூட குளிர்ச்சியான ஆன்மிக ஞானக் கதிர்களை அருள்கின்றனர். இதுவே நவ ராத்திரியின் சிறப்பு.

ஒன்பது மாதம் தாயின் கருப்பையில் அடைபட்டு, ஒன்பது துவாரங்களுள்ள இவ்வுடலினைக் கொண்டு, ஒன் பது கோள்களுக்குட்பட்டு, ஒன்பது வகைத் தானியங்களைப் புசித்து, ஒன்பது சுவைகளைச் சுவைத்து, ஒன்பது இரத்தி னங்களை அணிந்து, ஒன்பது இரவுகள் ஒன்பது துர்க்கை களை ஒன்பதுவகைப்பக்தியினால் அருச்சித்து, இந்த 'நவ' (ஒன்பது) என்னும் சப்தத்தை 'மானவ' (மனிதன்) என்னும் சொல்லில் மனிதன் இணைத்துக் கொண்டானோ என் னவோ. ஆனால், 'நவ' = நீ புதியவன், 'மா' = 'இல்லை' என்னும் என்றும் உண்மையான ஆன்மாவினை, தொடக்க மில்லாத ஆன்ம அனுபவத்தை உணராது, அனைத்தையும் மறந்து உடலின் மாயையினால் சஞ்சலமான மனத்தினைத் துணையாகக்கொண்டு உலகியல் முறையில் 'நவ' = புதிய விஷயங்களைக் காணுவதற்கான முயற்சியில் ஈடுபடுகிறான் இன்றைய மனிதன். இயற்பியல் நிலைப்பிற்கு ஏற்பாடு செய்ய முற்படுகின்றான். அதற்கு ஒருபோதும் நிலைப்புத் தன்மை ஏற்படாது என்னும் முக்கிய உண்மையிணை அவன் மறந்து விடுகின்றான். இன்பத்திற்கான வேட்கை அல்லது தவிப்பு அதிகமாகியுள்ளது. ஆனால், இன்பத்

திற்கு எதிரானது ஒன்று உள்ளது. அதுதான் துன்பம். உலக வாழ்வினில் இன்பம், துன்பம் இரண்டும் உண்டா கின்றன. இறையனுபவத்தில் மகிழ்ச்சி கிடைக்கின்றது. ஆனந்தம் என்பதற்கு எதிர்ச் சொல் இல்லை. இன்பத்தை விரும்புவோருக்குத் துன்பம் தப்பாது. மின்சாரம் இருக் கும் போது இன்பம்; அது இல்லாவிட்டால் துன்பம். கார் வாங்கும்போது இன்பம்; விபத்து ஏற்பட்டால் துன் பம். போகம் இன்பம்; ரோகம் துன்பம். இருதன்மை கொண்ட இவ்வுலகில், இந்த இருதன்மை மனிதனை ஆட்டிப்படைக்கிறது. ஆயினும், இந்த 'நவ' (புதிய) என்னும் சொல்லில் உள்ள என்றுமுள்ள புதுமை மனித னின் ஆத்ம சாதனை அமைப்பில் வர வேண்டும். அத்தகு சாதனையின் விளைவாக, அமைதியுடன் கூடிய புதுமை, எண்ணத்தில், நடத்தையில், பார்வையில், பேச்சில், செய லில், இலக்கியப் படைப்பில், பாட்டில் கிடைக்கின்றது. அதிகரிக்கும் மகிழ்ச்சியுடன் கூடிய இம் மலர்ச்சியான உணர்வு நிலையில் அகங்காரம் (நான் என்னும் அகந்தை) இல்லை. பொறாமை முதலியன இல்லை. கோபதாபங்கள் எவையும் உதவிக்கு வராத நிலை. எல்லாம் அமைதி மயம். இந்நிலை கைவரப்பெறுவதற்கு 'நவ' என்னும் ஒலியி னையுடைய மானவன் அல்லது மனிதன், நவராத்திரியின் இரகசியத்தை, தேவியின் அர்ச்சனை முறையினைத் தெரிந் துகொண்டு, மானவன் என்னும் சொல்லிலுள்ள முதல் எழுத்தான 'மா', அதாவது, அன்னை என்னும் பொரு ளினை உணர்ந்து, அன்னை வழிபாட்டினில் அமிழ்ந்து போகவேண்டும்.

இந்த 'நவ' என்றும் சொல்லிற்கு நிரம்ப முக்கியத்து வம் உள்ளது. 'நவ' என்றால் ஒன்பது என்று பொருள். 9 க்குப் பின்னர் வேறு எண் எதுவுமில்லை. ஆண்டிற்கு 360 நாள் அல்லவா! அது மட்டுமன்றி, ஆண்டிற்கு உத்தராயணம், தட்சிணாயணம் என இரண்டு அயனங்கள் உள்ளன. அயனம் ஒன்றிற்கு 180 நாள்கள். நட்சத்திரங்கள் 27. ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் 4 பாதங்கள். 27x4 = 108 பாதங்கள். அங்ஙனமே, மனித உடல்கூட 72,000 நாடி களுடன் கூடியது என்பது நமது சித்தாந்தம். உள்மூச்சு, வெளிமூச்சு வடிவில் மனிதன் காற்றை உள்ளிழுத்து வெளியே விடுகிறான். அது கூட முறையான வகையில் நாள் ஒன்றிற்கு 21,600 மூச்சுகள் என்பது வழக்கு. அந்த

உள்மூச்சு, வெளிமூச்சுகளையே ஹம்ஸங்கள் என்கின்றனர். யோக சாத்திரத்தின்படி, மூலாதாரச் சக்கரத்திற்கு 600, சுவாதிஷ்டானசக்கரத்திற்கு 6000, மணிபூரகச்சக்கரத்திற்கு 6000, அனாஹத சக்கரத்திற்கு 6000, விசுத்த சக்கரத்திற்கு 1000, ஆக்ஞை சக்கரத்திற்கு 1000, ஸஹஸ்ரார சக்கரத்திற்கு 1000 ஹம்ஸங்கள் என்பது நமது இந்திய மகரிஷிகளின் முடிவு. அதுமட்டுமன்றி, ஜபமாலையின் மணிகளின் எண்ணிக்கை 108 அல்லவா! 108 மணிகள் உள்ள மாலையினால் 200 தடவை ஜபித்தால் 108x200=21,600 ஹம்ஸமந்திரங்களினாலான உபாசனை ஆகிறது. மேற் கூறப்பட்டதில் இருக்கும் எண்களைக் கூட்டினல் ஒன்பது என்னும் எண்ணிக்கை வரும்.

இந்த ஒன்பது என்னும் எண்ணிக்கையை அடிப்படையாகக்கொண்டு, வியாசர் பதினெட்டுப் புராணங்களையும் பதினெட்டு உபபுராணங்களையும், பதினெட்டுப் பருவங்களோடுகூடிய மகாபாரதத்தினையும், பதினெட்டு அத்தியாயங்களுடன் கூடிய பகவத்கீதையினையும் எழுதினார். கீதை 2-ஆம் அத்தியாயத்தில் 72 சுலோகங்கள் உள்ளன. ஸ்திதப்பிரக்ஞையுள்ளவனை (நிலைத்த நிறைஞானியினை)ப் பற்றிய சுலோகங்கள் 'ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான், ஆத்மன்யேவாத்மனா துஷ்ட: ஸ்திதப்ரக்ஞஸ் ததோச்யதே' (பார்த்தா, மனத்தில் எழுகின்ற ஆசைகளை எல்லாம் அகற்றி ஆன்மாவில் ஆன்ம நிறைவு பெற்றிருப்பவன் நிறை ஞானி எனப்படுகின்றான்) என்றும் 55-ஆவது சுலோகத்திலிருந்து, 'ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி. ஸ்தித்வா அஸ்யாமந்தகாலேபி ப்ரம்மநிர்வாணம் ருச்சதி' (பார்த்தா, இதுவே பிரம்ம நிலைபேறு ஆகும். இதை அடைபவனுக்கு மோகமில்லை. இறுதிக்காலத்திலாவது இதில் நிலைத்திருப்பவன் பிரம்ம நிர்வாணம் அல்லது மனம் மொழிக்கு எட்டாத பேரானந்தப் பெருநிலையினை அடைகிறான்) என்னும் 72-ஆவது சுலோகம் வரை பதினெட்டு உள்ளன. குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் 18 அக்ஷௌஹிணி* போர்ப்படைகள் இருந்தன.

---

* அக்ஷௌஹிணி: 21,870 இரதங்கள், 21,1870 யானைகள், 65,610 குதிரைகள், 1,09,350 காலாட்கள் கொண்ட போர்ப்படை ஓர் அக்ஷௌஹிணி எனப் பெறுகின்றது. மொழிபெயர்ப்பாளர்.

போர் 18 நாள்கள் நடந்தது. 18 என்றால் 1+8=9 என்பது பொருள். 9 ஆம் பெருக்கலானாலும், எண்களைக்கூட்டினால் 9 எண்ணிக்கையே கிடைக்கும். 9x1 = 9; 9x2 = 18.....1+8 = 9 ஆகிறது அல்லவா! அவ்வாறே, 9ஆம் பெருக்கலில் பெருக்கிவரும் தொகையுடன் 9 ஐச்சேர்த்தாலும் வருவது 9. 9 x1 = 9; 9+9 = 18; 1+8 = 9. மேலும், 1-இலிருந்து 9 வரை உள்ள எண்களைக் கூட்டினால் வருவது 45; 4+5 = 9. 11- இலிருந்து 19 வரை உள்ள எண்களைக் கூட்டினால் வருவது 135 ஆகிறது; 1+3+5 = 9. அங்ஙனமே, மூன்று நவராத்திரிகள் 9x3 = 27; 2+7 = 9 என வருகிறது. பிரதமையிலிருந்து நவமிவரை, அதாவது, 1-இலிருந்து 9 வரை கூட்டினால் வருவது 45; சதுர்த்தியிலிருந்து துவாதசி வரை, அதாவது, 4- இலிலிருந்து 12 வரை கூட்டினால் வருவது 72; மீண்டும், பிரதமையிலிருந்து நவமிவரை, அதாவது, 1- இலிருந்து 9 வரை கூட்டினால் வருவது 45. இம் மூன்றையும் கூட்டினால் 45+72+45 = 162, 1+6+2 = 9 என்று ஆகிறது. இவையே வசந்த, கணபதி, தேவி நவராத்திரிகள். அமைதியை அடைய விரும்புபவன், இந்த ஒன்பது என்னும் எண்ணிக்கையினை ஆதாரமாகக் கொண்டு, தேவி நவராத்திரியில் ஒன்பது துர்க்கைகளைப் பூஜித்து, நவாவரணம் அல்லது ஒன்பது சுற்றடைப்புகளுடன் கூடிய ஸ்ரீசக்கர வழிபாட்டினைப் பக்தியுடன் நிகழ்த்தி, மானிடத்தன்மையினைப் பெற்று, மிக்க உயர்ந்தோனாகி, விஜயதசமியுடன் பரிபூரணத்தை, அதாவது, முழுநிறைவினை அடைய வேண்டும். அம்பிகையின் அருளினால்தான் சித்தி ஏற்படவேண்டும். மானிடத்தன்மை, மோட்சம் அடைவதற்கான விருப்பம், மகான்களைச் சேருதல் ஆகியவை கூட இறையருள் அல்லாது கிடைப்பது அரிது என ஆதிசங்கரர் தமது 'விவேகசூடாமணி' என்னும் நூலில் கூறியிருக்கிறார். எனவே, மனிதனிடம் திரிவேணி சங்கமம் (முக்கூடல்) போன்று, மேற்குறிப்பிட்ட மூன்றும் இருந்தால்தான், இந்த நவராத்திரி பூஜையில் ஒவ்வொரு படியாக ஏற முடியும். 'ப்ரதமம் சைலபுத்ரீதி த்விதியம் ப்ரஹ்மசாரிணீ. த்ருதீயம் சந்த்ரகண்டேதி கூஷ்மாண்டேதி சதுர்த்தகம்; பஞ்சமம் ஸ்கந்தமாதேதி. ஷஷ்டம் காத்யாயனீதி. ஸப்தமம் காளராத்ரீதி மஹா. கௌரீதி சாஷ்டகம்; நவமம் ஸித்திதா ப்ரோக்தா நவதுர்கா: ப்ரகீர்த்திதா:' - சைல புத்திரி (மலைமகள்),

பிரம்மசாரிணீ, ஸித்திதா (சித்தியை அளிப்பவள்) என்ற வாறாக. நவதுர்க்கைகள் 'தேவிகவசம்' துதியில் குறிக்கப் படுகின்றனர்.

இச் சக்தி ஆராதனையை எதற்காகச் செய்ய வேண்டும்? இதற்கு இத்துணை முக்கியத்துவம் எப்படி வந்தது? 'யா தேவீ ஸர்வபூதேஷு சக்திரூபேண ஸம்ஸ்திதா, நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:' - (எல்லாப் பொருள்களிலும் சக்தி உருவில் அமைந் திருப்பவளான தேவிக்கு வணக்கம், வணக்கம், வணக்கம்) என 'ஸப்தசதி' நூலில் கூறப்பட்டுள்ளது போல, ஒவ்வொ ருவருக்கும் சக்தி வேண்டும். 'நாயமாத்மா பலஹீனேன லப்ய:' (இவ்வாத்மாவினைப் பலவீனனால் அடைய முடி யாது) என்பது உபநிடதத்தின் கூற்று. இது அனைவ ருக்கும் நன்கு தெரிந்துள்ள ஒன்றே ஆகும். எனவேதான், 'ருத்ரஹீனம் விஷ்ணுஹீனம் ந வதந்தி ஜனாஸ்ததா, சக்தி ஹீனம் யதா ஸர்வே ப்ரவதந்தி நராத-மம்' - சக்தியில்லாதவனைக் கடையன் எனச்சொல்வது போல் ருத்ரனில்லாதவன், விஷ்ணு இல்லாதவன் ஆகி யோரை அவ்வாறு மக்கள் சொல்வதில்லை என்பது 'தேவி பாகவத'த்தின் கூற்று. அவ்வாறு எனில், பிர பஞ்சம் முழுவதிலும், அசைவன மற்றும் அசையாதன ஆன கோடிக்கணக்கான உயிர்களில் உள்ளார்ந்திருக்கும், அவற்றை இயக்கும் அச்சக்தி எது? கல்வியாளர்களி டையே கல்விச்சக்தியாகவும், தருமத்தைப் பின்பற்றுவோரி டையே தருமசக்தியாகவும், பணக்காரர்களிடையே பணச் சக்தியாகவும், சொல்லில் வாக்குச்சக்தியாகவும், யோகியர் களிடத்தில் யோகசக்தியாகவும், ஞானியரிடம் ஞானசக்தி யாகவும், மனத்தில் சங்கல்ப சக்தியாகவும் வர்ணிக்க லாயேயன்றி, வரையறுக்க முடியாத அத் திவ்யசக்தி தனது சக்தியினை எங்கும் பரவச் செய்து, சக்தியுடன் அல்லது வல்லமையுடன் பரிபாலித்து வருகின்றது. அவ ளின் சக்தி முடிவில்லாதது, கரைகாணாதது. ஒரே உலக அன்னையான அவளுக்கு வணக்கங்கள். ஆயுதங்களில், வித்தையில், தருமத்தில், கலைகளில் இருக்கும் அந்தந்த சக்தியினை மனத்தினால் உணர்ந்து, பருப்பகுதி, நுண் பகுதி எனப் பிரித்தறிந்து, பரஸ்பர உதவியுடன் மாந்தர் தமது வாழ்க்கைத் தேரினை இழுத்துச் செல்ல வேண் டும். ஆகவேதான், அனைவரிடமும் எல்லாவடிவங்களிலும்

விளங்கும் அச்சக்தியின் வழிபாடு மனிதனுக்கு மிகவும் இன்றியமையாததா யுள்ளது.

இனி, அச்சக்தியினை அன்பு வடிவில் 'யா தேவீ ஸர்வபூதேஷு ப்ரேமரூபேண ஸம்ஸ்திதா நமஸ். தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:' - எல்லா உயிர்களிடத்தும் அன்புவடிவத்துடன் இருக்கும் அத்தேவிக்கு வணக்கம், வணக்கம், வணக்கம் என அனைவருக்கும் எடுத்துக் கூறியுள்ளது 'ஸப்தசதி'. பெற்ற தாய் ஆயினும், அவள் கோபத்துடன் இருந்தால் அவளின் குழந்தை அருகே செல்வதற்குத் தயங்கும். அதாவது, எல்லாஉலகமு... இந்த அன்புச் சக்தியின் மீது ஆதாரப் பட்டுள்ளது என்பது வெளிப்படை. இவ்வன்பு எத்தனை வகையானவையோ அவற்றை பிரம்மதேவனால் கூட வர்ணிக்க இயலாது! தாயன்புடன் தொடங்கிய இந்த அன்பு, இடையில் மனைவி, கணவன், குழந்தை, செல்வம், தானியம், நாடு ஆகியவைபால் இருக்கும் அன்பாக தன்னலத்தினால் மாசடைந்து, பின்னர், குரு, தெய்வம் ஆகியவைபால் உள்ள அன்பாக எழுச்சியடைந்து, தன்னலமற்ற புத்தியுடன், தூய அன்புடன் அம்பிகையினிடம் சேர வேண்டும். எந்தத் தாயன்புடன் மனிதன் வளர்ந்து பெரியவன் ஆனானோ, அதே அன்பினையே உலக அன்னையிடம் இருத்தி, அவளை வழிபட்டு, போற்றி, இறைஞ்சி, தவிப்புடனும் ஏக்கத்துடனும் வேண்டினால் அவ்வன்னை தவறாது கருணைபுரிவாள். அவளின் அன்பிற்கு முதலுமில்லை, முடிவுமில்லை. வரையறுக்க முடியாத, சொல்லில் வடிக்க இயலாத அன்பு அவ்வன்னையிடம்தான் காணப் படுகிறது. உலகவியலைச் சேர்ந்த அன்பு உண்மையான அன்பு அன்று; அது ஒரு பெரும் மயக்கம். மயக்கம் குறைந்தால் இந்த அன்பு கூடக் குறைந்துபோகும். இது அன்பின் வடிவிலுள்ள தன்னலம். தன்னலம் அதிகமானால் இந்த அன்பு சுருங்கும். ஒருவருக்கு ஒருவர் பெரும் மயக்கத்தில் ஆழ்ந்து, ஒருவருடைய தன்னலத்திற்கு இன்னொருவரைப் பயன்படுத்திக் கொண்டு கவர்ச்சி குறைந்தவுடன் சச்சரவுடன் தோன்றி முடிவடைவது இந்த உலகியல் அன்பு. அன்பு என்றால் அது இறைவன்பாலுள்ள அன்பே. இத்தூய அன்பினில் பரந்த தன்மை இருக்குமே அல்லாது, அதில் சுருங்குதல் ஏற்படாது. இத்தூய அன்பினில் தன்னலமற்ற தன்மை இருக்குமே அல்

லாது தன்னலமே இராது. முதலில் சுருங்கி யிருந்த இந்த நிர்மலமான அன்பு உலகம் முழுவதும் அளாவியதாக ஆகும். எனவே, இந்த அன்பினில் உள்ள தூய்மையின் இரகசியத்தை உணர்ந்து, இத்தூய்மையான அன்பிற்கு 'நான் அடிமை' எனக் கைகூப்பி, அச்சக்தியினை அன்பு வடிவாக, அன்பு மயமாக, அன்புக்கடலாக ஆராதித்து, அவ்வன்புக்கடலில் கரைந்து போகின்றான் அன்பு வழிபாடு செய்பவன். இவ்வுபாசனையினால் சாதகனுக்கு 'முகம் ப்ரஸன்னம் விமலா ச த்ருஷ்டி: ததானு-கம்போ மதுரா ச வாணீ, ஸ்நேஹாதிக:-' மலர்ந்த முகம், களங்கமில்லாத பார்வை, பரிவு, இனிமையான சொல், மிகுதியான அன்பு ஆகியவை கிடைக்கும். அந் தரங்கத்தில் அனுபவத்துடன் அது பிறக்க வேண்டும். வேப்பமரத்திற்கு எவ்வளவு சர்க்கரை மூட்டைகள் போட் டாலும் வேப்பங்காய்க்கு இனிப்பு வராது. பாம்பிற்குத் தினமும் பால் வார்த்தாலும் பாம்பினிடமிருந்து நஞ்சே வெளிப்படும். நாக்கிற்கு எத்தனை இனிப்புப்பண்டங்கள் தின்பதற்குக் கொடுத்தாலும் அதற்கு இனிமையாகப் பேச வருமா? உபாசனை பலம், சாதன பலம், குருவின் அருள், பகவதியின் அன்பு ஆகியவை இருந்தால்தான் மனிதன் எல்லா நற்குணங்களையும் பெற இயலும்.

இந்த அன்பு உலகினை அடைந்து எவ்வாறு வளர்ச் சியுற்றது? 'யா தேவீ ஸர்வபூதேஷு மாத்ரு ரூபேண ஸம்ஸ்திதா நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:' - அன்னை வடிவில் உள்ள தேவிக்கு வணக் கம், வணக்கம், வணக்கம் என்றவாறு அதனைத் தாயுரு வாக மாற்றியது 'ஸப்தசதி' என்னும் பெருநூல். அதா வது, அன்னை உருவினுள் இந்த அன்பு நுழைந்தது. சக்தியில் வேறுபாடுகள் உள்ளன; அன்பினில் வேறுபா டுகள் உள்ளன; ஆனால், அன்னையினிடம் மட்டும் வேறுபாடு காணமுடியாது. காலையில் எழுந்தது முதல் 'அம்மா' எனக் கூப்பிடும் அழைப்பில் சிறிதுகூட வேறு பாடு இல்லை என்பது எல்லோருக்கும் தெரியும். எந்தச் சாதியிலும், எந்த மொழியிலும், எந்த நாட்டிலும், எந்த மனிதனுக்கும், எந்த விலங்கினுக்கும் தாய் தாயே. அதுவே தாயினிடம் உள்ள தனித்தன்மை. ஒவ்வொரு தாயும் தனது குழந்தைகளை நேசிக்கின்றாள். நம் அனைவ ராலும் கொடியவிலங்குகள் எனக் கருதப்படும் சிங்கம்,

புலி முதலியவை கூடத் தங்கள் குட்டிகளை நேசக்கின்றன. தாயின் இலக்கணம் தனது குழந்தையை நேசிப்பதுதான். அனைவரையும்விட, எல்லாவற்றையும்விட நெருக்கமானவள் தாய். எத்தனை குழந்தைகள் இருந்தாலும், 'அம்மா' எனக்கூப்பிட்ட உடனேயே குரல்கொடுத்து, யாருக்கு என்ன வேண்டுமோ அவற்றை அவர்களுக்குக் கொடுத்து, அனைவருக்கும் மகிழ்ச்சியூட்டி, அவர்கள் அனைவரையும் ஒரேவிதமாகக் கருதி, அவர்களின் இன்ப துன்பங்களில் பங்கெடுத்துக் கொண்டு, அவர்களைக் கவனத்துடன் பார்த்துக் கொள்ளும் சக்தி ஒரு தாயினிடமே உள்ளது என்றால் அதில் மிகைச்சொல் எதுவுமில்லை. ஆனால், இக் குழந்தைகள் எல்லோரும் பெரியவர்கள் ஆகி, கல்வி பெற்று, அலுவலாளர்கள் ஆகி, திருமணமாகி, நிலை பெற்ற பின்னர், தங்களிடமிருந்து எதையும் விரும்பாது வேலை செய்த அவ்வன்னையினை, தங்கள் நலத்திற்காகவே எப்போதும் தவித்துவந்த அவ்வன்னையினை, முதுமைப்பருவத்தில் சக்தி குன்றிப் பலவீனமாகிப்போன அவ்வன்னையினை, அந்த ஒரு தாயைப் போஷிப்பதற்கு எத்துணை யோசனை செய்கின்றனர்! சொத்துக்களையும் பண்டங்களையும் பிரித்துக் கொள்வது போன்று, தாயையும் கூடப் பிரித்துக்கொள்கின்றனர், இப்பிள்ளைகள். தன்னலமின்மை தாயின் இயல்பு; தன்னலமே குழந்தைகளின் இயல்பு. தங்கள் குடும்பங்களுக்கு உபயோகமாயிருந்தால்தான் தாயைப் பராமரிக்கின்றனர், இப்பிள்ளைகள். இதுவே உலகப்போக்கு. ஆனால், இப்பிறப்பினை அளித்த தாய், உடலைப்பேணி வளர்க்கின்றாள், மன வளர்ச்சியினையும் கவனித்துக் கொள்கின்றாள். அவளால் மோட்சத்தை மட்டும் கொடுக்க முடிவதில்லை. அது உலக அன்னையின் அலுவல் அல்லவா! அவ்வன்னை, செயல்களின் விளைவாகத் தோன்றிய இவ்வுடலின் அழியும்தன்மையினை உணர்ந்து கொள்வதற்கான விவேகத்தினை வழங்குகிறாள். பக்தியின் இனிப்புச் சுவையினை நுகர வழிகாட்டுகிறாள். அறிவியல் இரகசியங்களை விளக்குகின்றாள். தெய்விக அன்பு அமுதத்தினைப் பொழிகின்றாள். தன்னை உளமார நம்பியவர்களின் அனைத்துப் பொறுப்புக்களையும் ஏற்றுக்கொள்கிறாள். அவளுடைய தாயன்பின் பெருக்கில் சிறு குழந்தையைப்போல் ஆகி, மகிழ்ச்சியினை அனுபவிப்பதே பக்தனின் நிலையாகும். இறுதியில்,

முக்தி அல்லது விடுதலையினையும் அருளி, பிறப்பிறப்புத்த ளையினை உடைத்து, பிறப்பின்மையை வழங்குகிறாள். பிறப்பினையளித்த இத்தாயின் அன்பினை உணர்ந்து கொண்டவர்கள், உலக அன்னையின் அனைத்தளாவிய அன்பினையும் அடையமுடியும். ஆனால், இத்தாயன்பின் பொருளை உணராதவர்களால், உலக அன்னையின் அப் பரந்த அன்பினை உணர இயலாது. ஆதலால், மாந்தர் கள் ஜகதீச்வரியின் அருளுக்குப் பாத்திரர்களாக வேண்டும் என விருப்பமுற்ற நமது வேத்மாதா, 'மாத்ருதேவோ பவ' (அன்னையைத் தெய்வமாகப் பாவிக்கவும்) என்று தாய்க்கு முதலிடம் வழங்கினாள். தெரிந்ததைக் கொண்டு தெரி யாததைத் தேடுவது முறை. அன்னைக்கு முதலிடம் அளித்தவன், கல்வியில் முதலிடம், ஆன்மிகவாழ்வினில் முதலிடம், உலகினில் முதலிடம் பெற இயலும் என்ப தில் ஐயம் ஏதும் இல்லை. இத்தாயினிடமிருந்து பெற்ற அன்பினால், பிரபஞ்சப் படைப்பினுக்கே மூலகாரணமான உலக அன்னைக்காக ஏங்கி உருகி, அவளைக் கண்டு, அவளின் தாயன்பினைப் பெற்று, அவளுடைய மடியினில் கவலையற்றுப் படுத்துவிட வேண்டும். இப் பெரும் பேற்றினை மனிதனுக்கு அருள்வதற்காக அனைத்திலும் வியாபித்திருக்கும் அச் சக்தி அன்புருவினளாய், தாய் உரு வம் தரித்துள்ளாள். அவ்வன்னையினை மனம், மொழி, மெய் ஆகியவை வாயிலாக, அதாவது, மூன்று பொறிகள் மூலமாக வழிபடவேண்டும். 'யந்மனஸா த்யாயதி தத் வாரா வததி, யத்வாசா வததி தத்கர்மணா கரோதி' - மனதால் தியானித்தது சொல்லின் வாயிலாக வெளிப் படுகின்றது, சொல்லின் வாயிலாகக் கூறுவதை செய்கை யினால் செய்கிறான், அதாவது, மனத்தில் நினைப்பது, சொற்களினால் வெளிப்படுத்துவது, கைகளால் செய்வது, எல்லாம் ஒன்றாக ஆகவேண்டும். இதுவே திரிகரணசுத்தி அல்லது முப்பொறித் தூய்மை; இதன்மூலமாகச் சித்தி பெறவேண்டும். திரிகரணசுத்தி இல்லாவிட்டால் காரிய சித்தி ஏற்படாது.

இந்த உபாசனை முறை எதைப் போன்றது? உபாச னையில் பல வேறுபாடுகள் இருந்தாலும் சிறப்பாக, விக்கி ரக வழிபாடு, இலிங்கம் போன்ற குறிப்பொருள் வழிபாடு, ஆன்ம வழிபாடு என இது மூவகைப்படும். சகுணமாகி, உருவத்துடன் கூடியதாகி உள்ளது விக்கிரக வழிபாடு.

அனைத்து நற்பண்புகளுடன் பிரகாசித்து, எழில் உருவினை மேற்கொண்டு, நல்ல உறுப்புகளுடன் விளங்கி, இறையடியார்களின் உள்ளங்களைக் கவர்ந்து, அவர்கள் இதயத்தில் உள்ள தவிப்பை உணர்ந்து, அவர்களின் பிரார்த்தனைகளைக் கேட்டு, அவர்களைத் தாயன்புடன் ஆதரித்து, அவர்கள் மனத்திற்கு அமைதியினை அருளி, அவர்களுடைய வழிபாட்டு முறையினுக்கேற்ற உருவினை ஏற்று, அவர்களை கடைத்தேற்றும் இறைவடிவம், விக்கிரக ஆராதனையில் வழிபடு தெய்வமாக விளங்குகிறது. இந்த உருவ வழிபாடு ஸ்தூலமானது. தீயவர்களைத் தண்டித்தல், நல்லவர்களைக் காப்பாற்றுதல், பல நற்பண்புகளுடன் கூடி, 'மோஹன ரூபாய' என்றவாறு மயக்கும் வடிவத்துடன், 'ஆஜாநுபாஹுமரவிந்த தளாயதாக்ஷம்' எனச் சொல்வதுபோல, முழந்தாள்வரை நீண்டகைகளுடனும் தாமரையிதழொத்த கண்களுடனும் இராமபிரான் அவதரித்தார். 'கார்மேக வண்ணன், பங்கயக் கண்ணன்' என மயிற்பீலி சூடி, எழிலின் திரட்டு என ஆயிரமாயிரம் பேர்களால் பாராட்டப்பெற்ற கண்ணபிரான் கூட உலகினில் அவதரித்தார். உருவ வழிபாட்டினில் இவ்வவதாரங்களையும் உருப்படுத்திக் கொள்ளலாம். இவை ஸ்தூல அல்லது பரு வடிவங்கள் ஆகும்.

இனி இரண்டாவதான குறிப்பொருள் வழிபாட்டினில், வழிபடுதெய்வம், நற்குணங்களுடன் கூடியதாய், அரு உருவத்தினைக்கொண்டதாய், உறுப்புகளில்லாதவகையில் அமைந்திருக்கும். இதுவே சிவலிங்கம். அவயவங்களில்லாத இவ்வடிவம் பிரம்மாண்டத்தை, அதாவது, பேருலகைச் சுட்டுவதாகும். அவயவங்களில்லாத சிவன் நாகாபரணம் பூண்டு தலையினில் பிறைசூடி, யானைத் தோல் போர்த்தி, திரிசூலம் தரித்து, மயானத்தில் இருந்து கொண்டு, காமனை வென்று, முக்கண்ணனாய், சமாதி நிஷ்டையில் இருப்பவனாய், வாத்ஸல்யம் முதலிய பண்புநலன்களுடன் கூடியவனாய், பக்தனுக்கு வசப்பட்ட சங்கரனாகவும் இருக்கின்றான். சிவனுக்கு உருவ வடிவம், உருவமற்ற, அதாவது, அருவுருவான வடிவம் என இரண்டு வடிவங்கள் உள்ளன. உருவவடிவ முள்ள கோவில்கள் அரிது எனச் சொல்லலாம். சாதாரணமாக, சிவாலயங்களில் சிவலிங்கமே இருக்கும். இத்தகைய குறிப்பொருள் வழிபாடு என்பது சைவத்தில் தான் இருக்கிறது எனச் சொல்ல வேண்டும்.

இது சூட்சும அல்லது நுண் வடிவம். இந்த வழிபாட்டு முறை கூடச் சூட்சுமமானதே.

இவ்வழிபாடு பரு வடிவிலிருந்து நுண்வடிவிற்குச்செல் கின்றது. இது உபாசகனின் புத்தியினை சூட்சுமநிலைக்கு இட்டுச் செல்கிறது. அதனால், இவ்வுபாசகனுக்கு புத்தி சூட்சுமம், நுண்பாவங்களை உணரும் ஆற்றல், நுண் பார்வை முதலிய சூட்சும இயல்புகள் மேம்படுகின்றன. நிலம், தீ, நீர், வளி, விசும்பு என்பன பஞ்சபூதங்கள் அல் லது ஐம்பொருள்களாகும். பஞ்சபூதங்களாலான உடலும் ஐம்பொருள்களைக் கொண்டதே. இவ்வைந்தினுள் ஒன்று மற்றதை விட சூட்சுமமானதாகும். இங்ஙனம், பஞ்சபூ தங் களைத் தரித்த சிவனும் பஞ்சபூதாத்மகன் ஆயினன். திருநீறு தரித்தல் பிருதிவி அல்லது நிலத் தத்துவத் தையும், கங்கையைத்தலையில் தரிப்பது 'அப்' அல்லது நீர்த்தத்துவத்தையும், முக்கண்ணனாக இருப்பது அக்னி அல்லது நெருப்புத் தத்துவத்தையும், பாம்புகளைத்தரிப்பது வாயு அல்லது காற்றுத்தத்துவத்தையும், திகம்பர அல்லது ஆடையற்ற நிலையில் இருப்பது ஆகாசம் அல்லது விசும்புத்தத்துவத்தையும் குறிப்பதால் சிவன் ஐம்பூதங்க ளையும் தரிப்பவன் ஆயினன். இந்த சூட்சுமமான இரகசியங்களை ஒருமுனைப்பட்ட தவத்தினால் அறிந்து கொண்ட நமது பாரத நாட்டின் முனிபுங்கவர்கள் அந் தந்தப்பூதங்களைக்குறிக்கும் ஐந்து இலிங்கங்களை ஐந்து புனித இடங்களில் பிரதிட்டை செய்து, மனிதர்கள் மனம் தெய்வத்தின்பால் செல்லும் பொருட்டுப் புனிதப்பயணங் கள் செய்ய வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தி யுள்ளனர். யாத்திரைகள் செய்ய விரும்புவோர், வெறும் அஞ்சல் அட்டைகளைப் போலல்லாமல், க்ஷேத்திரத்தின் மஹிமை, தெய்வத்தின் சிறப்பு ஆகியவற்றை உணரவேண் டும். காஞ்சி, இராமேசுவரம் ஆகிய இடங்களில் மணலால் ஆன இலிங்கங்களும், அதாவது, பிருதிவிலிங்கங்களும், ஐம்புகேச்வரம் அல்லது திருவானைக்காவில் ஜல லிங்க மும், திருவண்ணாமலையில் தேஜோலிங்கமும், ஸ்ரீ காள ஹஸ்தியில் வாயுலிங்கமும், சிதம்பரத்தில் ஆகாசலிங்கமும் உள்ளன.

இந்தப் பஞ்சபூத உபாசனை ஸ்தூலமான பிருதிவி அல்லது மண்ணுடன் தொடங்குகிறது. பூமி கடினத்

தன்மை வாய்ந்தது, அதாவது, கெட்டியானது. உழுதால் இப்பூமி மெதுத்தன்மையினை அடைகிறது. மெதுவாய் இருந்தாலன்றி விதைகளை விதைப்பதற்கான வாய்ப்பு இராது. விதை போட்டால்தான் முளை விடும். முளை வளர்ந்து பெரிதாகி மலரவேண்டும். அதன்பின்னர் காயாக மாறவேண்டும். பிறகு அக் காய் பழம் ஆகின்றது. இம்மாதிரியே சாதனையையும் செய்ய வேண்டும். பல பிறப்புகளாக உலக விஷயங்களினால் கட்டி கட்டிப் போய், இறுகிப்போன இதயப் புலத்தினை கடினத்திலும் கடினமான நியம நிட்டைகளினால் உழுது, வேதவாக்கியங்கள் எனப்படும் வித்துக்களை விதைத்து, முளைத்த கன்றுகளைப் பக்தி என்னும் நீரினால் போஷித்து, புலனலுவல்கள் என்னும் களைகளை மனக்கட்டுப்பாட்டினால் அகற்றி, காமம், கோபம் முதலிய பூச்சிகளைத் தவத்தினால் எரித்துச்சாம்பலாக்கி, பிரம்ம ஞானம் என்னும் பயிரை விளைவித்துக்கொள்ள வேண்டும், சாதகன். நிலத்திற்கு இருக்கும் கடினத்தன்மையினைக் கடுமையான கட்டுப்பாட்டினாலும் கடினமான தவத்தினாலும் மெதுவாக்குவதைக் குறிக்கோளாகக் கொள்கிறான் சாதகன். இச்சாதனையின் விளைவாக பூமிதேவிக்குள்ள பொறுமை என்னும் பண்பு அவனுக்குக் கிடைக்கிறது. அவன் பொறுமையை மேற்கொண்டவனாகத் திகழ்கிறான். உலகம் முழுதும் எதிர்த்தாலும் அவ் வுபாசகனை எதிர்க்க முடியாது. அத்துணை உறுதி அவனுக்கு உண்டாகிறது. இதுவே பிருதிவி லிங்க வழிபாடு.

இனி, இரண்டாவது நீர் என்னும் பொருள். மனிதன் நிற்பதற்கான ஆதாரம் பூமி என்றால், அவன் உயிருக்கு அடிப்படை நீர் எனச்சொல்லவேண்டும். நிலத்தில் பயிர் விளைவிக்க வேண்டுமெனின் நீர் தேவைப்படுகிறது. எனவே தான், 'யோபாம் புஷ்பம் வேத' என மந்திரபுஷ்பம் சொல்லும்போது, இந்நீர் அனைத்திற்கும் ஆதாரமாயுள்ளது எனச் சொல்லப்பட்டுள்ளது. 'அக்னிர்வா அபாமாயதனம் ஆயதனவான் பவதி . . . . .' என அக்னியினின்றும் தொடங்கி, அக்னி, வாயு, சூரியன், சந்திரன், நட்சத்திரம், வருஷம் முதலியன யாவும் பரஸ்பரம் ஒன்றை ஒன்று ஆதாரமாகக் கொண்டு, மனிதனின் உலக வாழ்வினை இன்பத்துடன் கூடியதாகச்செய்வதோடு கூட, ஆன்மிகச்சாதனை முறையினையும்

அது எடுத்துச்சொல்கிறது. குளிர்ந்த நீர் தாகத்தைத் தீர்க்கின்றது. உறுப்புகளுக்கு மகிழ்ச்சியினை அளிக்கின் றது. மாசின்மைக்கு நீரை எடுத்துக்காட்டாகக் குறிப்பிட லாம். சிநேகம், அதாவது, ஒட்டிக்கொள்ளும்தன்மை நீரின் இயல்பு. அதுமட்டுமன்றி வடிவமில்லாத நீர், எந்தப்பாத்தி ரத்தில் வைக்கப்படுகிறதோ அப்பாத்திரத்தின் வடிவினைப் பெறும். இந்த நீரினை இலட்சியமாக வைத்துக்கொள்ளும் சாதகன், நீரைப்போன்று உலகியல் பொருள்களில் நாட்டம் கொண்டு ஓடும் மனத்தினை இறைவனின்பால் திருப்பி, தனது சாதனையின் தீவிரத்தினால் தூயதான தனது மனத்தினை இறைவனின் உருவத்தினை மேற் கொள்ளுமாறு செய்து கொள்கிறான். மாசின்மையினைப் பெறுகிறான். நீர் பாய்ந்த நிலத்தில் பயிர்கள் விளைவது போல, இந்த உபாசகனும் தான் நடமாடும் பிரதேசத்தில் இருக்கும் கோடிக்கணக்கான சாதகர்களின் இதயங்களில் அமைதி என்னும் பயிரை விளைவிக்கிறான். சிநேகத்து டன் எல்லோருடனும் கலந்து போகிறான். சிநேகத்தின் இனிமையின் சுவையை எல்லோரும் சுவைக்கும்படி செய் கிறான். குளுமையான பேச்சு, குளுமையான பார்வை, குளுமையான ஸ்பரிசம் ஆகியவற்றினால் சரத்கால (கூதிர் கால)ச் சந்திரனைப் போல் பிரகாசித்து, அனைவருக்கும் மகிழ்வைத்தருகிறான். இதுவே ஜலலிங்க வழிபாடு.

மூன்றாவது அக்னி. உணவைச் சமைப்பதற்கு மனித னுக்கு நெருப்பு தேவை. பொருள்கள் புலப்படவேண்டுமெ னின் பொலிவு அவசியம். ஆரோக்கியம் வேண்டும் என்றால் சூரிய வெளிச்சம் தேவை. இரவில் எந்த வேலை செய்ய வேண்டும் என்றாலும் விளக்கு இன்றியமையாதது. இவை புறத்தேவைகள். ஆனால், நாம் சாப்பிட்ட உணவு சீரண மாக வேண்டுமானால் 'அஹம் வைச்வானரோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாச்ரித: ப்ராணாபானஸமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம்' நான் வைச்வாநரன் என்னும் வயிற்றுக்கனலாக ஆகி, உயிர்களின் உடல்களில் இருந்து கொண்டு பிராணன், அபானன் முதலிய ஐந்து வாயுக் களுடன் கூடி நான்குவகை அன்னத்தைச் சமைக்கின்றேன் எனப் பகவத்கீதை பதினைந்தாவது அத்தியாயத்தில் கிருஷ் ண'பகவான் கூறியதைப் போல், வயிற்றுக் கனல் தேவை. மேமுகூறியவாறு, இந் நெருப்பு அகத்திலும் புறத்திலும் பல்வேறு வடிவங்களுடன், பல்வேறு வழிகளில், பல்வகை

அலுவல்களைச்செய்தால்தான் மனிதனின் உயிர்வாழ்க்கை நடைபெற முடியும். மனிதனின் உடலில் சூடு குறைந்தால், அதாவது, அது குளிர்ந்து போனால் இனி உடலை வீட்டில் வைத்திருக்கமாட்டார்கள். இதுவே மரணம் அல்லது சாவு. நெருப்பினால் எல்லாம் நீறாகிப்போகிறது. நெருப்பிற்குத் தூய்மையின்மை கிடையாது. நெருப்பிற்குக் கறையான் பிடிக்காது என்னும் பழமொழி உண்டு அல்லவா! உலகின் அழியுந்தன்மையினை உணர்ந்து, விவேகத்துடன் பற்றற்றவனாகி, ஆசாரியனின் சந்நிதியில் உடன்வசிப்பவனாகி, புலன்களை வென்று, கட்டுப்பாட்டுடன் சாதகம் முதலியவற்றைச் செய்து, வேதங்களை ஸ்வரத்துடனும் பொருளுடனும் அத்தியயனம் செய்து, வேதாந்தத்தின் உட்பொருளான பிரம்ம சொரூபத்தினை, கேட்டல் (சிரவணம்), மனத்தில் நினைத்தல் (மனனம்), தொடர்ந்து சிந்தித்துத் தியானம் செய்தல் (நிதித்யாஸனம்) என்பவை மூலமாகத் தெரிந்து கொண்டு, *மகாவாக்கியங்களின் உட்பொருளைக் குருவின் உபதேசத்தினால் அறிந்து கொண்டு, சாதகனாக ஆகி, அனுபவக்கடலில் முழுகிச் சித்திபெற்று, அக்னியைப் போல் ஒளிவடிவாகிப் பிரகாசிக்கின்றான் சாதகன். அம்மகாத்மாவை உலகின் பாவங்கள் தீண்டுவதில்லை. அவர் தமது திருமுன் சேர்ந்தவர்களின் பாவங்களைச் சுட்டெரித்து விடும் ஆற்றலுடையவர். பிரம்மதேஜஸ் என்பது இதுதான். இதுவே அக்னிலிங்க வழிபாடு.

நான்காவது வாயு. ஒவ்வொருவருக்கும் வாயு அவசியமானது. பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என ஐந்துவகைகளில் மனிதனின் உடலில் சஞ்சரித்துக் கொண்டு, மனித உடல் நிலை பெற்றிருப்பதற்கு வாயு ஆதாரமாயுள்ளது. இவ்வாயு ஐந்து உபவாயுக்களுடன்கூடி, உடலினைக்காப்பாற்றி வருகிறது. மூச்சு விடாமல் ஒருகணம் கூட மனிதன் இருக்க முடியாது. புறவாயு புறஉடலுக்கு உபயோகமாகின்றது. இவ்வாயு

---

* 'ப்ரக்ஞானம் ப்ரஹ்ம' ( அறிவுணர்வே பிரம்மம்). 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' (நான் பிரம்மமாக உள்ளேன்). 'தத்வமஸி' (நீ அதாக இருக்கிறாய்). 'அயம் ஆத்மா ப்ரஹ்ம' (இந்த ஆத்மா பிரம்மம்) என்பவை முறையே ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்களிலுள்ள மகாவாக்கியங்கள் எனப்படுகின்றன மொழிபெயர்ப்பாளர்.

வினையே யோகிகள் 'ரேசகம்', (மூச்சைவெளிவிடுதல்), 'பூரகம்' (மூச்சை உள்ளிழுத்தல்) ஆகியவை மூலமாக உள்ளிழுத்து, வெளிவிட்டு 'கும்பகம்' என்பதனால் அதை அடக்குகிறார்கள். இதைத்தான் பிராணாயாமம் என்கின்ற னர். மேற் சொன்னவாறு கும்பகப்படுத்தப்பட்ட, அதாவது, அடக்கப்பட்ட வாயு இதயத்தில் இரத்தத்தைத் தூய் மைப்படுத்தி, உடல்நலத்தையும் வழங்குகின்றது. மூச்சை அடக்கிவைத்திருக்கும் காலத்தைச் சிலர் அதிகப்படுத்து கின்றனர். யோகசித்தாந்தத்தின்படி, மனித உடலில் ஆறு சக்கரங்கள் (ஆற்றல் இருப்பிடங்கள்) உள்ளன. அவற்றையே மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தம், ஆக்ஞைச்சக்கரங்கள் என்கின்றனர். மூலாதாரச் சக்கரத்தில் சுருண்டிருக்கும் ஓர் அற்புத சக்தி இருக்கின் றது. இது குண்டலினி சக்தி* எனப்படுகிறது. இப் பிராணாயாமப் பயிற்சியினைச் சில கட்டுப்பாடுகளுடன், குருவின் பார்வையில் ஒழுங்காகச் செய்தால், இக் குண்ட லினிசக்தி ஆறு சக்கரங்கள் வழியாகச் சென்று, ஆக்ஞைச் சக்கரத்தில் நுழைகின்றது. அந்த ஆக்ஞைச் சக்கரம் அர்த்தநாரீச்வர் (பாதி ஆண், பாதி பெண்) தத்துவத் தைக் குறிப்பிடுவதாகும். அதாவது, மனம், இதயம் இரண்டின் சேர்க்கை என்று பொருள். மனத்தினை, ஆணாகவும், அதாவது, சிவனாகவும், இதயத்தினை சக்தி யாகவும், அதாவது, பார்வதியாகவும் நமது சாத்திரங்கள் வருணிக்கின்றன. மனம் மட்டும் அபிவிருத்தி யடைந்தால், சங்கீதம் (இசை), சாகித்தியம் (இலக்கியம்), சிற்பம், ஓவி யம், கவித்துவம் ( செய்யுளியற்றுதல்) ஆகிய கலைகள் கைவரப்பெறுகின்றன. ஆனால், அவை வெறும் உலகி யல்புள்ளனவாய் இருந்தால், பொறாமை, வெறுப்பு ஆகி யவை அழியா. புகழ், பெயர் ஆகியவற்றிற்காகத் தவித் தல், அவை கிட்டினால் மகிழ்ச்சியினால் பொங்கிப்போதல், அவை கிட்டாவிடில் குமைந்துபோதல் தவிர்க்க முடியாதன வாயிருக்கும். ஆனால், மனத்துடன் இதயமும் கலந்தால், சங்கீதம், சாகித்தியம் முதலியவை உயர்கலைகளாகப் பரி ணமித்துப் பிரகாசித்து, கடவுளுக்கு அணுக்கமானவையாக ஆகி, அமைதி, மகிழ்ச்சி ஆகியவற்றை மனிதன் அனு

* குண்டலினியோகம் குறித்து ஸ்ரீ அநுபவானந்த சுவாமி. அன்னை தியாகீசானந்த புரி ஆகியோரால் இயற்றப் பட்டிருக்கும் 'சாதன ரகசியம்' என்னும் நூலினைப் படிக்கவும்.

பவிக்கின்றான். 'நிதி சால ஸுகமா? ராமுனி ........' என இராம பக்தரான தியாகராஜரைப் போல் இதயத்தில் இசை பாடி நிலையான புகழினைப் பெறுகின்றான். பண்ணில் அன்பினை நிரப்புகின்றான். அவ்வன்பினை இதயத்தில் செலுத்துகின்றான். அத்தகு இதயத்தினை இறைவனுக்கு அர்ப்பணம் செய்கின்றான். இதுவே மனம், இதயம் ஆகியவற்றின் இணைப்பின் இரகசியமாகும். இந்த இணைப்பில் ஆன்ம அறிவு ஒளிர்கின்றது. அதில் செல்வத்திற்கான வேட்கை இராது. புகழிற்கான தாபம் இராது. பொறாமை, வெறுப்பு இரா. காமம், கோபம் அறவே இரா. இருப்பது ஒன்றுதான். அதுவே அமைதி! பேரமைதி! மேற்கூறியவாறு, எங்கும் நிறைந்திருக்கும், எல் லாவற்றிற்கும் ஆதாரமாயிருக்கும் வாயுவினை எல்லோரும் வரவேற்றுச் சுவைக்கின்றனர். இவ்வுடலுக்குப் பிராண வாயு அல்லது உயிர்வளி இன்றியமையாதது. வாயுவின் இவ்வசைவிற்குக் கடவுளே காரணம். வாயுவை எதுவும் தீண்டாது. வாயு எல்லா இடத்திலும் சஞ்சரிக்கும். அங் ஙனமே, பற்றின்மை என்னும் செல்வத்தையுடைய சாதக னும் எல்லாத் தேசங்களிலும் திரிபவனாக இருக்கின்றான். வாயு பல்வேறு மலர்களினின்றும் நறுமணத்தைத் திரட்டு வதுபோல், இச்சாதகனும் மகான்கள் பலரிடமும் சேர்ந்து, பல ஆன்மிக விஷயங்களைத் தெரிந்து கொள்கின்றான். வாயு நறுமணத்தை எங்குஎங்கோ எடுத்துச் சென்று பரப் புவதைப் போல, இச் சாதகனும் தான் சாதித்த அனுபவ அறிவினை, சாதி, மதம், குலம், தேசம் என்னும் வேறு பாடுகளின்றி அனைவருக்கும் அளிக்கின்றான். காற்றினை எல்லோரும் வரவேற்பதைப் போல், அச் சாதகனை, அனை வரும் உளமார வரவேற்கின்றனர். வாயுவை எதுவும் தீண்டாதிருப்பதைப் போலவே அம் மகானையும் எதுவும் தீண்டுவதில்லை. இதுவே வாயுலிங்க வழிபாடு.

கடைசியாக ஆகாயம். பிராணிகள் வசிப்பதற்கு வாய்ப்பு அளிக்கும் இவ்விசும்பினுக்கு அணுக்கமுடையது ஆன்மா. எனவேதான் 'ஆத்மன: ஆகாசஸ் ஸம். பூத:' - ஆன்மாவிலிருந்து ஆகாயம் உண்டாயிற்று என்றனர். எவ்வாறு என்பதனை வேதாந்தம் இயம்பு கின்றது. நீலவண்ண ஆகாயம் அருகில் இருப்பதைப் போல் காட்சியளித்துக் கொண்டு தொலைவினைச் சுட் டிக் காண்பிக்கின்றது. கிருஷ்ண பரமாத்மா கூட நீலமேக

நிறத்து உடலைக் கொண்டவனே. கருமுகிலைக் கண்டவு டனேயே மயில் மகிழ்ச்சியுடன் ஆடுவதுபோல, கிருஷ்ண பரமாத்மா என்னும் நீலமேகம் இதய வெளியில் தோன்றி யவுடன், பக்தனின் இதயம் என்னும் மயிலும் ஆனந்த நடம் புரிகின்றது. ஆகாயம் பரந்திருப்பது. அதே மாதி ரியே, ஆகாசலிங்க வழிபாட்டில் ஈடுபடுபவன் விசாலமான நோக்குடன், பரந்த உள்ளத்துடன், விசாலமான இதயத் துடன் சிந்தையற்று இருப்பான். குறுகியமனப்பான்மை என்பது அவனுக்குத் தெரியவே தெரியாது. பரந்த மனப் பாங்கின் எல்லாம் மகிழ்ச்சியே ! அவ் விசாலமான இத யத்தில் எல்லோருக்கும் இடமுண்டு. அப் பரந்த ஆன்மிகச் செல்வத்திற்கு வாரிசு ஆவானோ என்னவோ! இதுவே ஆகாசலிங்க வழிபாடு.

இந்த உருவ வழிபாடு, குறிப்பொருள் வழிபாடு ஆகி யவற்றையடுத்து மூன்றாவது ஆத்ம வழிபாடு. இது நிர்க்குண, நிராகார அல்லது உருவற்ற, உறுப்புகளில்லாத பிரம்ம சொரூபத்தைத் தெரிந்து கொள்வதாகும். இது அனைவருக்கும் இயலாதது. அதனால்தான், 'க்லேசோ. திகதரஸ்தேஷாமவ்யக்தாஸக்த சேதஸாம்' - நிர்க்குண பிரம்மத்தில் சித்தத்தை வைப்பவர்களுக்குப் பிரயாசை மிகவும் அதிகம் எனப் பகவத்கீதையின் பன்னிரண் டாம் அத்தியாயத்தில் கூறுகிறார் கண்ணபிரான். இவ் வழிபாடு கைவர வேண்டும் என்றால் முற்பிறவியில் நற் காரியங்கள் செய்திருக்க வேண்டும். புத்தியின் ஆற்றல் எழுச்சி பெறவேண்டும், தியாகம் பொங்கிப் பெருக்கெடுத்து ஓட வேண்டும். சத்துவகுணம் முழுமையாக வரவேண்டும். இரக்கம், பரிவு முதலிய நற்பண்புகள் மலர வேண்டும். பிற ழாத பிரம்மசரியம் இருக்கவேண்டும். தன்னலம் அழிய ,வேண்டும். உலகிலுள்ள நற்பண்புகள் யாவும் உருப்பெற வேண்டும். அனுபவம் மிகுந்த நல்ல குரு கிடைக்க வேண் டும். மிகக் கடினமான சாதனையினை மேற்கொள்ள வேண்டும். குருவினிடமிருந்து நான்கு மகாவாக்கியங்களின் பொருளையும் அறிந்து கொள்ள வேண்டும். அனுபவம் பெற வேண்டும். சாதனம் எதுவுமின்றி 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' (நான் பிரம்மமாக இருக்கிறேன்) என்றால் 'பிரம்மம்' போய், 'நான்' என்பது பெருகி வளர்ந்து, சிக்கல்கள் மிகுந்து, இருக்கும் அமைதி கூட மறைந்துவிடும்.

எனவேதான், 'சாஸ்த்ராணாம் ச கலானாம் ச லௌகிகானாம் குரௌஸ்திதௌ, இந்த்ரியாதீத விஷயா: கதம் ப்ராப்யா குரும் வினா' - உலகி யல் சாத்திரங்களுக்கும் கலைகளுக்கும் குரு வேண்டும் என்றால், புலன்களுக் கப்பாற்பட்ட பிரம்மம் சம்பந்தமான விஷயங்கள் குரு இல்லாமல் எவ்வாறு அடையப்பெறும்? என்பதற்கிணங்க, இவ்வழிபாட்டு முறையில் குரு நிரம்பவும் அவசியமானவர். 'ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்' - சாத்திர அறிவு, அனுபவஞானம் ஆகியவற்றில் வல்லவரான, பிரம் மநிஷ்டையிலுள்ள குருவினிடமே செல்லவேண்டும். இக்கா லத்தில் உண்மையான சிஷ்யர்களே இல்லையோ என்னவோ ! ஆனால், உண்மையான சிஷ்யனுக்கு உண்மையான குரு கிடைப்பார் என்பது மட்டும் உறுதியான உண்மை. இதற்கு எடுத்துக்காட்டு, இராமகிருஷ்ணர், விவேகானந்தர் ஆகியவர்களே! அத்தகைய குருசிஷ்ய பரம்பரையே நமது இந்திய ஆன்மிக அறிவிற்குப் பற்றுக் கோடு. 'இதி சுச்ரும பூர்வேஷாம்' - இவ்வாறு எங்கள் மூத்தவர்களிடமிருந்து கேட்டோம் என்கின்றது உபநிடதம். 'ஏவம் பரம்பராப். ராப்தம்' - இவ்வாறு வழிவழியாக அடையப்பெற்றது என்கின்றது கீதை. அப் பரம்பரையே நமது பாரதவிச் ஞான வைபவத்தினைப் பல்வேறு அயல்நாடுகளிலும் பிரசாரம் செய்து, ஏராளமானவர்களுக்கு அறிவுப்பிட்சை அளித்திருக்கிறது. நமது வேதாந்தத்தின் கொடியினைப் பறக்க விட்டிருக்கிறது. இத்தகைய குரு பரம்பரை வாயி லாகக் கற்றுக்கொள்ளப்பட வேண்டியதாகும், இந்த ஆத்ம வழிபாடு.

குறிப்பொருள் வழிபாட்டினில் பஞ்ச பூதங்களின் சொரூ பமான சிவனின் ஐந்து இலிங்க வழிபாட்டு முறையினை மேலே தெரிந்து கொண்டோம். சிவசக்தி என்கிறோம் அல் லவா! சக்தியைப் பற்றி இனித் தெரிந்துகொள்ள வேண்டும். 'சக்திஞானம் வினா தேவி நிர்வாணம் நோபலப்யதே' - சக்தி ஞானம் இல்லாவிட்டால் மோட்சம் கிடைக்காது என் பது தந்திரசாத்திரக் கூற்று. சிவன் பிரமத கணங்களுடன் கூடி இருப்பான் என்பது அனைவரும் அறிந்ததே. சக்தியை வழிபடுபவனாக இருந்தால், 'ப்ரமத' என்னும் மூன்று அட் சரங்களின் இறுதியிலுள்ள 'த' என்னும் எழுத்தை, ப்ர, 'ம' என்னும் எழுத்துக்களுக்கு நடுவில் வைத்து எல்லா வற்றிலும் பிரதமனாக அல்லது முதல்வனாக ஆகிறான்.

மோட்சத்திற்குக் காரணமான இவ்வுடலினை அளித்த தாய் முதலாவது சக்தி. அட்சராப்பியாசம் அல்லது எழுத்துப் பயிற்சியின் போது 'ஸரஸ்வதி நமஸ்துப்யம்' - சரஸ்வதி, உனக்கு வணக்கம் எனப் பிரார்த்திக்கப்படும், படிப்பிற்கான அத் தாய் இரண்டாவது சக்தி. உபநயனம் (அல்லது பூணூல் போடுவது) நிகழும் சமயத்தில் 'ஓம் பூர்புவஸ். ஸுவ:' என்னும் காயத்ரி மந்திரம் உபதேசிக்கப்பெற்று, அக்ஞானத்தை (அறிவின்மையை) அகற்றுவதற்காக ஜபிக் கப் பெறும் அக்காயத்ரீ அன்னை மூன்றாவது சக்தி. இவளே ஞான சக்தி. உபநயனத்திற்குப் பிறகு, வனங்க ளில் வானப்ரஸ்த (மூன்றாவது ஆச்ரமத்தில் இருக்கும்) குருவினிடம் உடன்வசிப்போனாக இருக்கும் போது, சொந் தத் தாயினை மறக்கச் செய்து, சீராட்டி, யோகக்ஷேமம் விசாரித்து, வாத்ஸல்யத்துடன் நாள்தோறும் உணவு தரும் குருபத்தினி நான்காவது சக்தி. குருவினிடம் சேர்ந்து, பக்தியுடன் பணிவிடை புரிந்து, வாழ்வின் மலர்ச்சிக்காக, நல்ல ஸ்வரத்துடன் அத்யயனம் செய்யப்படும் வேத அன்னை ஐந்தாவது சக்தி. இவ்வாறாக, குழந்தைப் பருவத்திலிருந்து மனித வாழ்விற்கு சக்தியே சாரதியாக இருப்பது தெளிவு. சக்திபஞ்சகம் எனப்படும் இவ்வைந்து சக்திகளை முறையோடு, சரியாகப் புரிந்து கொண்டு இவ்வுலகினில் செயலாற்றினால் எல்லாவற்றிலும் முதலா வது இடமே கிடைக்கும். அப் பற்றுதலும் ஆர்வமும் குறைந்தால் அவன் கடையனாகிறான். பெற்ற தாயினுக்குக் கௌரவமான இடமளித்து, உள்ளத்தை விரிவுபடுத்தி மலரச் செய்யும் வித்தையினை அடக்கத்துடனும் பணிவுடனும் கிரகித்து, பகுத்தறிவினையும் அறிவியல்ஞானத்தினையும் அருளும் காயத்ரீ அன்னையின் மந்திரத்தை உரிய முறையில் ஜபித்து, ஆயுள், உடல் நலம், நற்குணங்கள் ஆகியனவற் றின் அபிவிருத்திக்கென சத்துவ இயல்புள்ள உணவினைச் சமைத்து, தாயினைப் போல் போஷித்த குருபத்தினியின் ஆசி பலத்துடன், அறிவுச் சுரங்கமான வேதமாதாவின் அருளுடன், குருவின் கிருபைநிறைந்த கடைக்கண் பார் வையின் அனுக்கிரகத்துடன் அதிகாரம் பெறத்தகுதியினை அடைந்த மனிதன் உலக அன்னையின் தரிசனத்திற்கா கத் துடித்து ஏங்க வேண்டும். உண்மையில், சாக்தம் அங் கிருந்தே தொடங்குகிறது எனச் சொல்லலாம். மேற்கூறிய நல்லியல்புகளில் குறைவு ஏற்பட்டு, 'நான் சக்தி வழிபாடு செய்பவன்' என்றால் அதனால் பயன் ஏதும் கிடைக்காது.

இச் சாக்தத்தில் தாய், சேய் என்னும் உறவுதவிர வேறு எதுவுமில்லை. இப்புனித உறவினை உளமார உணர்ந்து, தன் வயதினைக் கூட மறந்து ' நான் தெய்விக அன்னையின் குழந்தை' என இராமகிருஷ்ண பரமஹம்சர் சொல்லியது போல், உலக அன்னையின் மடியில் கவலையற்றுக்கிடப்பதே சக்தி வழிபாட்டின் இலட்சியமாகும். வழிபடுபவன் உலக அன்னையினை அணுகுவதற்கான முயற்சியே வழிபாடு. பொறுமையின்மையோ, களைப்போ இல்லாது இடைவிடாது முயன்று முயன்று இறுதியில் அன்னையைப் பற்றிக் கொள்கின்றார். இது சாமான்யமானதே. ஆனால், இப்பக்தன் அன்னையினால் பற்றிக்கொள்ளப்பட்டால், இனி பிறப்பு, இறப்பு, மூப்பு ஆகியவை பற்றிய அச்சங்கள் இரா. ஏனைய சாதனமுறைகளைவிட இச்சாக்தவழிபாட்டிலுள்ள தனிச்சிறப்பாகும் இது! அவள் அகில உலகையும் பிறப்பித்தவள்! அகில உலகினாலும் ஆராதிக்கப்படுபவள்! அவள் விசால இதயமுள்ளவள்! அவள் விசாலமான கண்களை உடையவள்! அவள் அருளினால் அனைத்தும் அன்புமயமாகத் தோன்றும். இந்த சக்திவழிபாடு செய்பவன் பஞ்சாயதன பூஜை * முறையில் அம்பிகையை நடுவில் வைத்து, ஆராதனை செய்து மங்களம் செய்பவனாக ஆகின்றான்.

இத்துணை பரந்த உலகினைப் படைத்த அவ்வுலக அன்னை எப்படிப்பட்டவளோ, அவ்வன்னை எத்தனை நற்பண்புகளின் குவியலோ, எத்தனை எழிற்பிழம்போ, எத்தனை அன்புமயமான உருவமோ, எத்தனை பக்தர்களைக் காப்பாற்றினாளோ, எவ்வளவு பேருக்கு நேராகத் தரிசனம் வழங்கினாளோ, எனப் பலவாறாக எண்ணி ஆலோசித்து, பலப்பல நூல்களைப் படிக்கிறான்; பல சாத்திரங்களைக் கேட்கிறான், இம் மனிதன். ஆனால், அதனால் மட்டுமே அனுபவம் ஏற்பட்டுவிடாது. சமையல் நூலை வாங்கி, எத்தனை தடவை படித்தாலும் பசி தீருவதில்லை அல்லவா; அதைப் போலவே, வெறும் புத்தகப்படிப்பு கூட அவ்வளவுதான். "சங்கீதம், சாகித்தியம், கவிதை ஆகியவற்றைச் செயல்முறையில் பயின்றால்தான்

---

* ஆதித்தியன் (சூரியன்). அம்பிகை (தேவி), விஷ்ணு. கணநாதன் (விநாயகன்), மகேசுவரன் (சிவன்) ஆகிய ஐந்து உருப்பொருள்களை வணங்குவது பஞ்சாயதன பூஜை ஆகும். மொழிபெயர்ப்பாளர்.

அபிவிருத்தி உண்டாகும். அவ்வாறே, புத்தகத்தைப் படித்துத் தெரிந்து கொண்டவற்றைச் செயல் முறைக்குக் கொண்டுவர வேண்டும். இப்பயிற்சி இல்லாவிட்டால், எதுவும் கைகூடாது. ஆன்மிக வாழ்வில் இப்பயிற்சியே மிகவும் தேவை என மகான்கள் எச்சரித்துள்ளனர்.

'லலிதா ஸஹஸ்ரநாம' த்தில் உலக அன்னையின் புற உருவ வருணனைகளேயன்றி, பல உள்ரகசியங்களும் அடங்கியுள்ளன. 'ஸ்ரீ மாத்ரே நம:' என்னும் முதல் பெயரிலேயே அப்பராசக்தியினைத் தாயாகப் புலப்படுத்தி நெருக்கமான தாய், சேய் உறவினை நிரூபித்துள்ளது. அவள் தேவ காரியமாக அவதரித்தாள். எங்கே? சிதக்னிகுண்டத்தில், அதாவது, எவருடைய இதயத்தில் 'சித்' அல்லது அறிவு என்னும் தீ எரிகின்றதோ அங்கே என்று பொருள். எனவே தான், அவள் ஞானரூபிணியாக, அறிவு உருவினள் ஆகத் திகழ்கின்றாள். நான்கு கைகளுடன், சிவந்த ஒளியுடன், அமைதி உருக்கொண்டு, புன்னகையுடன் பிரகாசிக்கின்றாள். அவள் அணிமணிகளினால் அழகு செய்யப் பெற்றவளாய் அவ்வணிமணிகளுக்கே ஒளி சேர்க்கின்றாள். தனது கீழ்க் கண் பார்வையினாலாயே சராசரங்கள் அனைத்தையும் படைக்கவல்ல ஆதிபராசக்தி அவள். அப்பார்வையினால் தான் வேழமுகத்தோனை அவள் படைத்தாள். சரத்கால சந்திரனுக்கு ஒப்பான முகத்தையுடையவள் அவள். அவ்வன்னை தனித்தூய்மையின் திருவுரு. எல்லாமங்களங்களையும் அளிப்பவள் ஆதலால் அவள் சர்வமங்களா. அவள் நாத சொரூபிணி. பக்தர்களுக்கு அவள் கற்பகத்தரு. அவள் வேதத்தாய். பக்தர்களுக்கு அவள் ஒரு சிந்தாமணி. அவள் நாராயணி. அவள் பிராம்மிசக்தி. அவள் சர்வாணி. அவள் காயத்திரி. தவச்செல்வர்களின் வழிபடு தெய்வம் அவள். இத்தகைய பல வருணனைகள் அவளுடைய புறத்தோற்றத்தையும் அவளுடைய சக்திதத்துவத்தையும் தெரியப்படுத்துகின்றன.

இவ்வன்னையை 'மூலாதாரைகநிலயாயை நம:', 'மூலாதாராம் புஜாரூடாயை நம:' என்று மூலாதாரசக்கரத்தில் வசிப்பவளாக, 'ஸ்வாதிஷ்டானாம்புஜகதாயை நம:' என்று சுவாதிஷ்டான சக்கரத்தில் இருப்பவளாக, 'மணிபூராந்தருதிதாயை நம:', 'மணிபூராப்ஜநிலயாயை நம:' என்று மனிபூரகச் சக்கரத்தில் நிலைத்திருப்பவளாக, 'அநாஹதாப்ஜநிலயாயை நம:' என்று அநாஹதசக்கரத்

தில் இருப்பவளாக, விசுத்திசக்ரநிலயாயை நம: என்று விசுத்தச்சக்கரத்தில் உள்ளவளாக, 'ஆக்ஞாசக்ராந்தராளஸ்-தாயை நம: என்று ஆக்ஞாசக்கரத்தினுள் இருப்பவளாக விவரித்து, யோகசித்தாந்த முறையில் ஆறு ஆற்றல் சக்கரங்களையும் அதற்குரிய தேவதைகளுடன்கூட வருணித்துள்ளது 'லலிதா ஸஹஸ்ர நாமம்'. அன்றியும், ஆறுசக்கரங்களுக்கும் மேலேயுள்ள சஹஸ்ரார சக்கரத்தில் அமர்ந்து, அவ்வப்போது மூலாதார சக்கரம் வரை வந்து கொண்டு, அந்தந்த இடங்களில் தான் இருக்கும் சமயத்தில் உணவு, இயக்கம், ஆயுதம், உருவம், பெயர் ஆகியவற்றை மாற்றிக் கொண்டு, சாதகர்களுக்கு அவ்வதற்குரிய அனுப வங்களை வழங்குகின்றாள். இவை வெளிப் பார்வைக்குத் தெரியாது. இவை அனைத்தும் உள்நோக்குச் சாதனையில் தோன்றுபவை. இது அக ஆராதனை முறையாகும்.

இனி, அத்துவைத நோக்கில் 'நிராதாராயை நம:', 'நிர்க்குணாயை நம: 'நிர்விகாராயை நம:', ' நிராச்ர-யாயை நம:', 'நித்யாயை நம:,' 'நித்யசுத்தாயை நம:', 'பாபநாசின்யை நம:', 'பவநாசின்யை நம:', 'முக்திநில-யாயை நம:' என்று அப்பெயர்கள் எவ்வகை ஆதாரமும் இல்லாதவளாக, எவ்வகை குணங்களும் இல்லாதவளாக, மாறுதல் இல்லாதவளாக, எதையும் புகலாகக்கொள்ளாத வளாக, என்றும் இருப்பவளாக, என்றும் தூய்மையாய் இருப்பவளாக, பாவங்களை அழிக்கின்றவளாக, பவ என் னும் சம்சார உறவினை ஒடுக்குபவளாக அவளை தெளிவு படுத்திக் காட்டுகின்றன.

அவ்வன்னையை, தந்திர, மந்திர, யந்திரங்களின் உட் பொருளானவளாக 'மஹாதந்த்ராயை நம:', 'ஸர்வதந்த்-ரரூபாயை நம:', 'மஹாமந்த்ராயை ந ம:', 'மஹா-மந்த்ரஸ்வரூபிண்யை நம:', மஹாயந்த்ராயை நம:', 'மஹாயந்த்ராத்மிகாயை நம:' என்னும் பெயர்கள் வரு ணித்துள்ளன.

உண்மையில், இந்த தந்திர, மந்திர, யந்திரங்களின் பொருளை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த சக்திவழிபாட்டு முறை வேதங்களில் தோன்றி, உபநிடதங் களில் மலர்ச்சியடைந்து, ஆகம வடிவங்களில் பரிணாமம் அடைந்து, தந்திர சாத்திரமாகத் திகழ்ந்து, கடினமான மனித இதயத்தை மெதுவானதாகவும், மாசுற்ற இதயத்தை மாசற்றதாகவும், தூய்மையின்மையினைத் தூய்மையாகவும்

மாற்றி, மாந்தரிடையே நிரம்பவும் நெருங்கிநுழைந்து, முன் பில்லாத புதிய தொடர்பினை ஏற்படுத்தி, மகிழ்வளித்தது எனச் சொல்லலாம். வேதங்கள் அச்சக்தியினை ஆதிசக்தியாக, அதிதியாக வருணித்துள்ளன. பஹ்யுருச, தேவி, சீதா, சரஸ்வதி ரகசிய, திரிபுரதாபினி முதலிய உபநிடதங்கள் அந்த உலகத்தலைவியை ஆக்கல், அழித்தல், காத்தல் ஆகியவற்றிற்கு காரணமானவளாக, பார்வதியாக, மகாலட்சுமியாக, முக்குணத்தவளாக, காயத்திரியாக, திரிபுரசுந்தரியாக, துர்க்கையாக, ஸ்ரீ தேவியாக, புவனேசுவரியாக, பாலா ஆக விவரித்து, மனிதர்களுக்கு மிக அருகாமையில் கொண்டுவந்துள்ளன. எனவேதான், 'தத்தூரே தத்வதந்திகே' - அக்ஞானிகளுக்கு தூரமாகவும் ஞானிகளுக்கு அருகாமையிலும் இருப்பவள் என உபநிடதம் கூறுகின்றது. உபநிடதத்தில் விவரிக்கப்பெற்ற இச்சக்தி சிவனின் உடலினுள் நுழைந்து, அதில் பாதியாகி, சிவனின் வாயிலிருந்து மிக முக்கியமான விஷயங்களைப் பற்றுதலுடன் கேட்டறிந்து, 'ஆகதம் சிவவக்த்ராச்ச கதம் ச கிரிஜாச்ருதிம் மதம் ச வாஸுதேவஸ்ய' என்னும் முறையில் ஆகமச் தன்மை பெற்றது. அதுவே அன்றி, 'மதம் ச வாஸுதேவஸ்ய' என்பதனால் வைணவத்தையும் 'ஆகதம் சிவவக்த்ராச்ச' என்பதனால் சைவத்தையும் சேர்த்துக்கொண்டு, ஒருமைப்பாட்டினை ஏற்படுத்தி, உருவவழிபாடு, குறிப்பொருள் வழிபாடு ஆகியவற்றின் இரகசியங்களை விளக்கி, நுண்ணுருவில் கோடிக்கணக்கான எல்லா உயிர்களிலும் சராசரப் பொருள்களிலும் வியாபித்து, சக்தி உருவம் தரித்து, உலக அன்னையாக ஆயிற்று. இதுவே சாக்தம் என்னும் மதமாக ஆயிற்று. இத் தந்திரங்கள் வைணவ, சைவ, சாக்த, காணாபத்திய உருவங்களில் பலவிதமாகப் பரிணமித்தன. தந்திர உருவில் மனத்திற்கு விக்ஞானத்தை விவரமாக அறியச் செய்தாள் அப்பேரன்னை. 'தனோதி விபுலானர்த்தான் தத்வமந்த்ரஸமன்விதான், த்ராணம் ச குருதே யஸ்மாத்தந்த்ரமித்யபிதீயதே' - தத்துவம், மந்திரம் ஆகியவற்றுடன் கூடி, விரிவான அர்த்தங்கள் தெரிந்து காப்பாற்றுவதனால் தந்திரம் எனப் பெயர் வந்தது எனக் காமிகாகம தந்திரம் கூறுகின்றது. ஆனால், மனிதன், இவற்றைத் தவறான முறையில் உபயோகித்து, தனது தன்னலத்திற்காகத் தீய வழியினில் இறக்கி, இத்தந்திரங்களுக்குத் தவறான பொருளை ஏற்படுத்தி, தவறான தந்திரமாக மாற்றியிருக்கக் கூடும். இத்

தந்திர விக்ஞானக் கடலினுள் நுழைந்தாலன்றி இவற்றின் பெருமை புரியாது. எனவேதான், அவ்வன்னை தந்திர உருவினளாகப் போற்றப்பட்டாள். அவள் தந்திர உருவத்தினள்.

இனி, அவளுடைய மந்திர உருவம். மந்திரங்கள் பல. அத்தேவி ஒன்பதுகோடி மந்திரங்களால் ஆராதிக்கப்படுபவள். மந்திரங்களினால் அவளை பூஜிக்க வேண்டும். மந்திரங்களை சரியாக உச்சரிக்க வேண்டும். அதாவது, முறைப்படி ஒலிக்கச்செய்ய வேண்டும். மந்திரஜபம் செய்ய வேண்டும். மந்திரத்திற்குரிய அதிஷ்டான தேவதை எது என்பதனைத் தெரிந்து கொள்ள வேண்டும். தனது இயல்பிற்கேற்ற மந்திரத்தை, அனைத்து அனுபவமும் கொண்ட குருவினிடமிருந்து உபதேசம் பெற்றுக் கொள்ளவேண்டும். நூல்களிலுள்ள மந்திரங்கள் எல்லாவற்றையும் படித்து, ஏதோ ஒருசமயத்தில் ஏதோ ஒரு மந்திரத்தை வசதி கிடைக்கும்போது ஜபம் செய்வது என்பது கூடாது. எவ்வளவு கோடிகள் செய்தோம் என்பது கணக்கில்லை. உலகியல் விஷயங்களிலிருந்து எவ்வளவு விலகியுள்ளோம், கடவுளுக்கு எத்தனை அருகில் சென்றோம் என்பதைப் பரீட்சித்துக் கொண்டு இருக்க வேண்டும். முறையான வழியில், பொருள் உணர்ந்து மந்திரோச்சாரணம் செய்யாவிட்டால் காசி, பிரயாகை முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் இலட்சம் தடவை ஜபித்தாலும் வீணே. எனவேதான், 'மந்திரார்த்தம் மந்தரசைதன்யம் யோ ந ஜானாதி ஸாதக:, சதலக்ஷப்ரஜப்தேபி தஸ்ய மந்த்ரோ ந ஸித்யதி' - மந்திரத்தின் பொருளையும் மந்திரத்திற் குரிய தேவதையினையும் தெரிந்து கொள்ளாத சாதகன் கோடி ஜபம் செய்தாலும் மந்திர சித்தி ஏற்படாது என்பது 'மகாநிர்வாணதந்திர' த்தின் உபதேசமாகும். 'மனனாத் த்ராயதி இதி மந்த்ர:' - மனனம் செய்வதனால் காப்பாற்றுகிறது என்பதால் அது மந்திரம் எனப்படுகிறது; அதுவே அதன் வரையறுப்பு. மனனம், அதாவது, ஜபம் செய்தவனைக் காப்பாற்றுகிறது என்பது பொருள். மந்திரம் சத்துவகுண அபிவிருத்தியைக் குறிப்பதாக இருக்க வேண்டும். தாமசம், இராஜஸம் ஆகிய குணங்களை ஒடுக்கி யகற்ற வேண்டும். மந்திரத்திற்குரிய மூர்த்தியினைத்தாமச குணத்துடன் ஜபித்தால் தாமசமூர்த்தியாகவும், இராஜஸகுணத்துடன் ஜபித்தால் இராஜஸமூர்த்தியாகவும் புலனாகும். நிக்கிரஹம்

அல்லது கட்டுப்பாட்டுடன் ஜபித்தால் அநுக்ரஹ அல்லது அருள் வழங்கும் மூர்த்தியாகக் காட்சியளிக்கும். நிர்ப்ப யமாக அல்லது அச்சமின்றி ஜபித்தால் அபய மூர்த்தி யாக, அடைக்கலம் அளிக்கும் மூர்த்தியாக ஆகி அச்சத்தை அகற்றும். அன்புடன் ஜபித்தால் அன்புருக்கொண்டு காப் பாற்றும். குழந்தையாக இருந்து கொண்டு ஜபித்தால், தாயாக நின்று, தனது தாயன்பாகிய அமுதத்தை வழங் கும். 'யம் பாவம் தர்சயேத்யஸ்ய தம் பாவம் ஸ து பச்யதி' - எந்த பாவத்துடன் தரிசனம் செய்கிறானோ அதே பாவத்தைக் காண்கின்றான் அன்றோ! அதனால், சாதகன் தனது இஷ்டதேவதையின் மந்திரத்தினை பீஜா க்ஷரங்களுடன் அதாவது, அதன் சிறப்பெழுத்துக்களுடன் அனுபவமுள்ள குருவினிடமிருந்து உபதேசம் பெற்று, நம் பிக்கையுடனும் பக்தியுடனும் ஜபித்து, தனது பாவனைக் கேற்ற உருவத்தினைத் தரிசிக்கிறான். சாதகனிடத்தில் வேறுபாடேயன்றி, அன்னையிடம் இல்லை. சத்துவகுணம் மிகுந்த சாதகன் உலக அன்னையினை சத்துவகுணம் நிறைந்த உருவமாகவே தரிசிக்கிறான் அல்லவா!

இந்த சாக்த வழிபாட்டுப் பயிற்சியில், தற்காலத்தவர்க ளில் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் மிக்கப் புகழுடைந்தவர் எனக் கொள்வது மிகையாகாது. குழந்தை உள்ளத்து டன், குழந்தையின் இதயத்துடன் உருவெடுத்த, குழந்தைத் தத்துவம் இராமகிருஷ்ணருடையது. அவருடைய வழிபடு தெய்வம் காலத்தின் சொரூபமான காளிதேவி. அவளது புறத்தோற்றம் பயங்கரமானதாய் இருக்கும். அவள் திகம் பரி, அதாவது, திசைகளையே ஆடையாகக் கொண்டவள். அவள் மார்பின்மீது மண்டையோட்டு மாலை அசைந்து கொண்டிருக்கும். ஒரு கையில் மனிதனின் தலை. ஒரு கையில் வாள். சிவந்த நீளமான நாக்கு வெளியே தொங் கிக்கொண்டிருக்கும். மூன்று கண்களை உடையவள். மயா னத்தில் வசிப்பவள். ஜடப்பொருளுக்கிணையாக உள்ள சிவனின் மார்பின் மீது ஒரு பாதத்தை வைத்திருப்பவள். முகத்தில் புன்னகை நடமாடுகிறது. ஒரு கை பக்தர்களுக்கு அபயமளிக்கிறது. இப்புறத் தோற்றம் சாதாரண மக்களுக்கு நிரம்பவும் அச்சம் உண்டாக்குவதாகத் தோற்றமளிக்கிறது. ஆனால், அவ்வன்னையின் இந்தப் புற இயல்புகளுக் குப் பல உட்பொருள்கள் உள்ளன. அவள் திகம்பரியாக இருப்பது அவள் எங்கும் வியாபித்திருப்பதைக் குறிக்கி

றது. அவளுடைய மண்டையோட்டு மாலையில் ஐம்பது தலைகள் உள்ளன. அவை ஐம்பது எழுத்துக்களைக் குறிப்பனவாகும். ஒவ்வொரு தலையும் 'அ' முதல் 'க்ஷ' வரையுள்ள எழுத்துக்களை ஒவ்வொன்றாக உச்சரித்துக் கொண்டிருக்கும். 'அ', 'உ', 'ம' இவற்றால் ஆகிய 'ஓம்' என்பதன் ஒலி செவிக்குக் கேட்கிறது. அதாவது, அவள் நாத சொரூபிணி அல்லது ஒலிவடிவினள். அதனால்தான், 'நாதரூபிண்யை நம:,' ஸாமகான ப்ரியாயை நம:' என 'லலிதா ஸகஸ்ரநாமம்' அவ்வன்னையைப் போற்றுகின்றது. தீயோரைத்தண்டிப்பதை மனிதத்தலை குறிக்கின்றது. தீயோரைத் தண்டிப்பதற்காகவே அவள் வாள் ஏந்தியிருக்கிறாள். பக்தர்களின் பாவங்களைச் சாம்பலாக்குகிறது அவளுடைய மூன்றாவது கண். சிவனின் இருப்பிடமாகிய மயானம் வைராக்கியம் அல்லது பற்றின்மையைக் குறிப்பது. அவரது ஜடத்துவம் சமாதிநிலையினைத் தெரியப் படுத்துகிறது. அச்சமாதியே ஞானலட்சணம். ஞானசக்தி உருவினனான சிவனின் இதயத்திலிருந்து இச்சாசக்தியாகப் பரிணமித்த உலக அன்னை கிரியாசக்தியாகி, அனைத்துப் படைப்பு அலுவலையும் செய்கின்றாள். வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் அவளது நீண்ட நாக்கு அவளது சம்ஹார சக்தியினை அல்லது அழிக்கும் ஆற்றலை வெளிப்படுத்துகிறது. ஆனால், இராமகிருஷ்ணரின் பார்வையில் இவை அனைத்திற்கும் இடமில்லை. அவர் பார்த்ததெல்லாம் அவளது உதடுகளில் இருந்த அவ்வன்னையின் புன்னகையே! அவர் கண்டது அவ்வன்னையின் அபயம் அளிக்கும் கை மட்டுமே! அவருக்குப் புலப்பட்டது அவளுடைய கண்களில் இருந்த கருணை மாத்திரமே! அவருக்குத் தெளிவானது அவளது இதயத்தில் பொங்கிப் பெருக்கெடுத்தோடும் வாத்சல்யம் அல்லது தாயன்பு ஒன்றே! எனவேதான், அந்த அன்புமயமான தரிசனம் பெறவேண்டும் எனத் தீவிரமாக ஆசைப்பட்டார் அவர். அக் காளிதேவியின் சந்நிதியில் சிறிதுகாலம் பூஜைகள் செய்தார். பூஜைகளை மறந்து, போற்றி வழிபட்டார் சிறிதுகாலம். போற்றுவதையும் மறந்து, எப்போதும் அவ்வன்னையையே நினைத்துக் கொண்டிருந்தார். நினைவு செய்வதனையும் மறந்து, ஜபம் மேற்கொண்டார். ஜபம், மந்திரம் ஆகியவற்றை மறந்து தியானம் செய்தார். மனத் துடிப்புடன் பிரார்த்தித்தார். நிலத்தின் மீது விழுந்து புரண்டு துயருற்றார். நிலத்தின் மீது தலையை முட்டிக்கொண்டு அழுது

அரற்றினார். அவ்வன்னைக்காகத் தவித்துப் போனார். அவரது கண்ணீர் கால்வாயாகப் பெருகிற்று. இனிப் பொறுக்கமுடியவில்லை. தெய்வத்தின் காட்சி கிடைக்கப் பெறாத பிறவி வீண் என எண்ணினார். மிகவிரைவாக ஆலயத்திற்கு ஓடினார். தேவியின் திருமுன் நின்றார். பக்கத்தில் சுவரின் மீது தொங்கிகொண்டிருக்கும் வாளை எடுத்துக் கொண்டார். அவ்வன்னையை நோக்கினார். வணங்கினார். தன் தலையினைத் தேவிக்கு அர்ப்பணம் செய்யத் தயாரானார். அவ்வன்னையின் இதயம் உருகியது. கத்தியை எடுத்த கையினைப் பற்றிக் கொண்டது ஒரு குளிர்ந்த கரம். கோடி சூரியர்களின் பொலிவினைப் போல் ஒளிர்ந்த அத் திவ்விய மூர்த்தியினைக் கண்டார் இராமகிருஷ்ணர். இராமகிருஷ்ணரின் குழந்தை உள்ளத்தில் அவ்வன்னையின் தாயன்பே நிலைபெற்றுப் போயிற்று. அச்சம் விலகியது. அக் குளுமை நிறைந்த தீண்டுதலினால் மெய் சிலிர்த்துப் போனார். ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. மெய்மறந்துபோனார். தன் இஷ்ட தெய்வதரிசனப் பேற்றினால் அவருக்கு மகிழ்ச்சி பொங்கிப் பெருகிற்று. இவ்வுலகில் பிறந்தாலும், உலகப் பற்றுகள் தீண்டாத இதயங்கொண்ட தனது குழந்தையின் பக்தியையும் பற்றின்மையையும் கண்ட உலக அன்னைக்கு, எத்துணை மகிழ்ச்சியோ! அம் மகிழ்ச்சி வருணனைக்கு அப்பாற்பட்டது. சாத்துவிகப் பண்புடன், சாத்துவிகச் செய்கைகளுடன், சாத்துவிக எண்ணத்துடன், சாத்துவிக வழிபாட்டுடன் கூடிய சாத்துவிக உருவேயான இராமகிருஷ்ணர் வெளிப்பார்வைக்குப் பயங்கர உருவினளாகத் தோன்றும் காளிதேவியினைச் சாத்துவிக உருவினளாகக் கண்டு, சாத்துவிக குணத்தின் விளைவான தூய்மையினை அடைந்தார். தூய்மையான உடலுடன் உருவெடுத்து பவித்திர மூர்த்தியாகி, தூய்மையான பார்வை, தூய்மையான எண்ணம், தூய்மையான ஸ்பரிசம், தூய்மையான போதனைகள் ஆகியவை வாயிலாகத் தமது சிஷ்யர்களுக்குத் தூய்மையினை அருளி, தூய்மையான குருவாக விளங்கி, எல்லாமதங்களையும் ஒருமைப்படுத்தி, அனைத்துத் தேவர்கள், தேவிகள் ஆகியோரின் சொரூபமாக ஆகி, சாதனை அவதாரமாக திகழ்ந்து அகில உலகின் வணக்கத்திற்கு உரியவரானார். இது அவ்வன்னையின் மந்திர உருவம். இதுவே மந்திரவழிபாட்டின் இரகசியம்.

அடுத்து, யந்திர விஷயத்தை எடுத்துக் கொள்வோம். ஒவ்வொரு தேவதைக்கும் ஒவ்வொரு மந்திரம் இருப்பதைப் போன்று, ஒவ்வொரு தேவதைக்கும் ஒவ்வொரு யந்திரம் உள்ளது. அந்த யந்திரத்தில், அத்தேவதைக்குத் தொடர்பான பீஜாட்சரங்கள் அல்லது தனிச்சிறப்பெழுத்துக்கள இருக்கும். மந்திரத்தைப் போலவே யந்திரமும் பீஜாட்சரங்களுடன் கூடியதாயிருக்கும். மந்திரங்கள் பலப்பல. அங்ஙனமே, யந்திரங்களும் அநேகம். லட்சுமி யந்திரம், துர்க்கை யந்திரம் முதலியவை இருக்கின்றன அல்லவா! தேவாலயங்களில் தெய்வத்தைப் பிரதிட்டை செய்யும் போது, ஒரு செப்புத் தகட்டின்மீது அல்லது வெள்ளித் தகட்டின் மீது அல்லது தங்கத் தகட்டின்மீது பீஜாட்சரங்களை எழுதுகின்றனர். அதுவே யந்திரம் ஆகின்றது. அந்த யந்திரத்தை விக்கிரகத்தை அமர்த்தும் பீடத்தின் அடியில் வைக்கின்றனர். இதைப் பிராணப்பிரதிட்டை என்கின்றனர். தேவிபீடத்திற்குமுன் ஸ்ரீசக்கரம் கூடப் பிரதிட்டை செய்யப்படுகிறது. பிரதிட்டை செய்வதற்குமுன், விக்கிரகத்தைச் சடப்பொருளாகக் கருதுகின்றனர்; ஆனால், பிராணப் பிரதிட்டை ஆனபிறகு, சின்மயமாகக் கருதி, பூஜித்து, வணங்கி, நிவேதனப் பொருள்களைச் சமர்ப்பிக்கின்றனர். யந்திர ரகசியம் நன்கு தெரிந்து செய்ய வேண்டும். இதற்கு வெறும் படிப்பு அல்லது புலமை மட்டுமன்றி, அனுட்டானம், உபாசனை பலம், தூய்மை ஆகியவை இருக்க வேண்டும். அவை இல்லாவிட்டால் தேவாலயங்களுக்கு ஆகர்ஷணா அல்லது கவர்ச்சிச் சக்தியில் வளர்ச்சியும் முன்னேற்றமும் இரா. இந்த இரகசியம் அறிந்தவர்கள் ஆதலால் நமது ரிஷிகள் தங்கள் தவ ஆற்றல் முழுவதையும் செலவழித்து, கோவில்களைக் கட்டி, தெய்வங்களைப் பிரதிட்டை செய்தார்கள். எனவேதான், நமது பழங்காலத்திய கோவில்கள் இன்று கூட நலிவுறாது உள்ளன. இதற்கு அவர்களுடைய உபாசனை பலம், யந்திர சக்தி ஆகியனவே காரணம் ஆகும். அதனால்தான், அவ்வன்னை யந்திராத்மிகையாக, தெய்வ உருவினளாகத் திகழ்கின்றாள். இது அவ்வன்னையின் யந்திர உருவம்.

மனித வாழ்வினில் கூட அவ்வுலக அன்னை ஒரு மகாயந்திரமாகவே விளங்குகின்றாள் : 'யா தேவீ ஸர்வபூதேஷு சேதனேத்யபிதீயதே' எல்லாப்பொருள்களிலும் சேதனம் அல்லது அறிவுடைப் பொருளாக உள்ள தேவி

என 'சப்தசதி' கூறியிருப்பது போல், இந்த அறிவற்ற உடலில் சேதனமான அல்லது அறிவான யந்திரம் அவளே! சேதனம், அசேதனம் இரண்டுஉருவாக உள்ளவள் அவளே! அவள் மனிதனின் இதயத்தில் இருந்தால்தான் இவ்வுடலுக்கு மதிப்பு. இந்தச் சேதனா மூர்த்தியினை உபாசனை வழியில் உணரவேண்டும் என்றால் சற்குருவினைச் சேர வேண்டும். பற்றுகளிலிருந்து விலகிய பிறகே, குரு, சிஷ்யனின் ஆன்மிக வாழ்விற்குப் பிராணப் பிரதிட்டை செய்யவேண்டும். அப்போதுதான் சிஷ்யனின் மனப்பலகையின் மீது நுண்ணுருவில் பீஜாட்சரங்களைப் பொறிக்கின்றார். அதன் பின்னரே சிஷ்யன் உயர்வு நிலையை அடைந்து வணங்கத்தக்கவனாக ஆகமுடியும். அனுபவமுள்ள குருவினால்தான் சிஷ்யனுக்கு அபிவிருத்தி ஏற்படுகின்றது. இந்த யந்திரம் சேதனம் (அறிவுடைப்பொருள்). இராமகிருஷ்ணர் பஞ்சக்ருத்யபராயணி (அதாவது, ஆக்கல், அழித்தல், காத்தல், மறைத்தல், அருளல் என்றும் ஐவகை அலுவல்களில் ஈடுபட்டிருப்பவள்) ஆன காளிதேவிக்கு அனைத்தையும் அர்ப்பணித்து, கைகூப்பி 'அஹம் யந்த்ரம் பவான் யந் த்ரீ' - அம்மா! நான் யந்திரம், நீ அதை இயக்குபவள், என்று சொல்லி, உணர்வற்ற உடல் எனும் யந்திரத்தை இயக்கும் சேதனயந்திரமாக அவளைப் பாவித்தார். ஆனால், இந்த இரகசியம் தெரியாமல், வித்தை, செல்வம், உடல்பலம் ஆகியவற்றில் முழுகிப்போன மனிதன் அகந்தையினால் எல்லாம் தன்னாலேயே நடைபெறுகின்றது என்று எண்ணி, செருக்கடைகிறான். இவ்வகந்தை முற்றிலும் அழிந்தால் அன்றி அமைதி கிடைக்காது. அமைதியில் அகந்தை இல்லை. அகந்தையில் அமைதி இல்லை. அகந்தை குறைய வேண்டுமானால் நமது உள்ளே இருக்கும் சேதன உருவிலுள்ள யந்திர தேவதைக்கு வணக்கம் தெரிவித்துத்தான் ஆக வேண்டும்! எனவே, உள்ளே பிரதிட்டை செய்யப் பெற்ற யந்திர சக்தியின் பலத்துடன் சக்தியை உணர்ந்து, தந்திர சக்தியை உலகினில் பரவச் செய்ய வேண்டும் மனிதன். மேற் சொன்னவகையில், இந்த தந்திர, மந்திர, யந்திர உள்ளீடாக உள்ள தேவியின் உருவத்தினை முதலில் தந்திர நூல்களின் வாயிலாக அறிந்து, யந்திர உருவில் பிரதிட்டை செய்துகொண்டு மந்திர உருவமாகப் பாவித்து, உள்ளும் புறமும் அவ்வன்னையைத் தரிசனம் செய்கின்றான் சாதகன். நவாவரணங்கள், ஸ்ரீ சக்கரம் ஆகியவற்றின் பூஜை முறைகளின் இரகசியங்களைத்

தெரிந்துகொண்டு ஸ்ரீ மாதாவின் அருளைப் பெறுகிறான். சித்தி பெற்றவனாக, மகாத்மாவாக ஆகி உலகிற்கு அமைதியினை வழங்குகிறான்.

ஸ்ரீ மாதாவினைப் பற்றுடனும் பக்தியுடனும் வழிபட்டவர்களில் தென்னாட்டில் சியாமா சாஸ்திரி, முத்துஸ்வாமி தீட்சிதர் ஆகியோர் புகழ்படைத்தவர்கள். இவர்கள் ஸ்ரீ தேவியின் அருள்பெற்று, மகாவித்துவான்களாக ஆகி, சங்கீதம், சாகித்தியம் ஆகியவற்றில் பெரும்புலமை பெற்று, அன்னையின் மீது பாடல்கள் இயற்றியுள்ளனர். சியாமா சாஸ்திரி 'சியாம கிருஷ்ண' என்னும் பெயர் பூண்டு, தேவியை வழிபடுபவராக, சிறந்த புலமையுடையவராக, தேவியின்மீது பல கீர்த்தனைகளை இயற்றி கீர்த்தனையின் இறுதியில் 'சியாமகிருஷ்ணஸோதரி' என்பதிலுள்ள சியாம கிருஷ்ண என்னும் முத்திரையினை வைத்த மகான். இம் மாதிரியே, பாலாம்பிகை தேவியின் அருளினால் பிறந்த முத்துஸ்வாமி தீட்சிதர் ஆகம, மந்திர, சோதிட சாத்திரங்களில் வல்லவர். குருவின் அநுக்கிரகத்தினால் வீணை வாசிப்பதில் தேர்ச்சிபெற்று, தேவி உபாசகராகி, நவாவரணக் கீர்த்தனைகள் இயற்றி 'குருகுஹ' என்னும் முத்திரையினைப் பாடல்களில் இணைத்தவர். நவக்கிரகக் கீர்த்தனைகள்கூடப் புனைந்திருக்கிறார். நவாவரணக்கீர்த்தனைகளில் மந்திர, தந்திர, யந்திர இரகசியங்கள் காணப்படுகின்றன. சியாமா சாஸ்திரி, முத்துஸ்வாமி தீட்சிதர் ஆகியோரின் கீர்த்தனைகள் பெரிதும் புழக்கத்திலுள்ளன. இவர்கள் இருவரையும் சங்கீதச்சக்கரவர்த்திகள் எனக் குறிப்பிடுவது பொருத்தமே ஆகும். இவ்வாறு தேவியின் அருள் பெற்றவர்கள் எத்தனையோ மகான்கள் தாமும் மகிழ்வுற்று, அம் மகிழ்வினை உலகத்திற்கும் வழங்கிய திவ்வியமூர்த்திகள் ஆவர்.

இவ்வாறே, வங்க மாநிலத்தில் அக் காளிதேவியினை ஆராதித்து, பல கீர்த்தனைகள் இயற்றி, உலகப்புகழ் பெற்ற புண்ணியர்கள் இராம பிரசாத், கமலாகாந்த் ஆகியோர். இவர்களின் கீர்த்தனைகள் பெரிதும் பிரசித்தி அடைந்தவை. இவர்கள் இருவரும் கூப்பிட்டால் பிரத்தியட்சமாவாள் தேவி அன்னை. நற்பேறு பெற்றவர்கள். இத்தகு பெரும்பேறு எத்துணை பேருக்குக் கிடைக்கும்! இராம கிருஷ்ண பரமஹம்ஸர் பக்தியினால் பித்துப்பிடித்தவராய் இராமபிரசாத், கமலாகாந்த் ஆகியோரின் கீர்த்தனங்களை

இனிமையான குரலில் பாடி, கேட்பவர்களைத் தன்மயப்ப டுத்துபவர் என்று புகழ் பெற்றவர். வங்க நாட்டில் அம் மகாமாயையான அன்னைக்கு எத்தனையோ பிரியமான பக்தர்கள்!

இதுவரை பார்த்த வழியினில் ஆலோசனை செய்தால் மனிதனுக்கு 'பக்தி' மிக்க இன்றியமையாதது என் பது விளங்கும். தன்னைக் குறித்தோ, உலகைப்பற்றியோ ஆலோசித்தால் புலன்களுக்கு அகப்படாத ஏதோ ஒரு தெய் வீக சக்தி இருப்பது தெளிவாகும். நமக்கு எட்டாத அந் தச்சக்திக்கு போற்றுதல் பாவத்துடன், அடக்கம், பணிவு ஆகியவற்றுடன் வணக்கம் தெரிவிக்க வேண்டியதே! அந்த சக்தியின் அருளால் இப் படைப்பு இரகசியங்களைத் தெரிந்துகொள்ள வேண்டியதே. இது தவிர்க்கமுடியாதது. அதுவே பக்தி. 'மோக்ஷகாரணஸாமக்ர்யாம் பக்தி-ரேவ கரீயஸீ' - மோட்சத்திற்குக் காரணமாகும் பொருள்கள் அனைத்திலும் பக்தியே சிறப்பானது என பக்தியின் முக்கி யத்துவத்தை எடுத்துக் கூறியிருக்கிறது பக்தி சாத்திரம். 'பக்த்யா விநா ப்ரஹ்மஞானம் கதாபி நோபஜாயதே' - பக்தி இல்லாவிட்டால் பிரம்ம ஞானம் அடையமுடியாது என்றும் வலியுறுத்திக் கூறியுள்ளது. எனவே, மனிதன் முன்னதாகவே பகவானைப் புகலடைய வேண்டியதே! பக் தியுடன் கூடிய மனத்திற்கு அதிக சக்தி கிடைக்கிறது. தேவதேவியான அன்னைக்காக ஏங்கித் தவித்து, இரவும் பகலும் அவளை வழிபடுவதே பக்தி. அவளை எப்போதும் நினைப்பது பக்தி. அவ்வன்னையைப் பற்றிக் கேட்பது பக்தி. நிர்க்குணமான பொருளை ஸகுணமானதாக, அதா வது, குணங்களுடன் கூடியதாகச் செய்யும் சக்தி பக்திக்கே உள்ளது. உலக அன்னைக்காக அடைந்த துடிப்பும் வேட்கையும் உருவற்ற பரம்பொருளை உருவுடையதாகச் செய்கின்றது. அவ்வன்னையை அழைத்த அழைப்புகள் யாவும் சகஸ்ரநாமங்களாக, ஆயிரம் பெயர்களாக ஆயின. பக்தனின் இதய பரிதாபம் உச்ச கட்டத்தை அடைந்த நிலையினில் அந்த உருவமில்லாத, பண்புகள் இல்லாத, ஆதாரமில்லாத அந்த சக்தி, கண்ணிற்கு புலப்படாத சக்தி, எங்கும் நிறைந்திருக்கும் சக்தி, வரையறுக்க இயலாத சக்தி தனது பக்தனின் இஷ்ட தெய்வத்தின் உருவத்தினை ஏற்று, பக்தன்முன் காட்சியளித்து, அன்புடன் நோக்கி, தெய்விக ஆனந்தத்தினை அருளுகின்றது. ஒருமுறை அவ் வன்னை கண்ணெதிரே காட்சியளித்தாலே அத்துணை மகிழ்ச்சி ஏற்படுமானால், எப்போதும் எல்லா நிலைகளிலும்

அந்த அன்னையினையே தரிசித்துக் கொண்டிருப்பவர்களுக்கு எத்துணை ஆனந்தம் இருக்கும்! அத்தகைய நிலை உண்மையான இறையடியார்களுக்கே சாத்தியமாகும்.

இப் பக்தி ஒவ்வொரு படியாக உயர்ந்து, தன்னுடன் பக்தனையும் நடத்திச் செல்கிறது. சிரவணம் (கேட்டல்) முதலிய* ஒன்பதுவகைப் பக்தி வழிகளில் அனைத்து உறுப்புக்களையும் நன்முறையில் பயன்படுத்தச் செய்விக்கிறது. உலகியல் பற்றுக்களின்பால் கட்டுப்பாடு இல்லாது தாவும் புலன்கள் என்னும் குதிரைகளுக்குக் கடிவாளமிட்டு, கட்டுப்பாட்டில் வைக்கின்றது. புற இந்திரியங்களை அடக்கி, உட்புலன்களின் கட்டுப்பாட்டிற்கு வழிகாட்டுகின்றது. மனத்தை அடக்குகிறது. அடக்கம், பணிவு ஆகியவற்றை அளித்து, அகந்தையை நிர்மூலமாக்குகிறது. மனக் கட்டுப்பாடு ஏற்பட்டால் அன்றி, ஒருமுனைப்பு வராது. ஒருமுனைப்பு இல்லாவிட்டால் ஜபம் நடைபெறாது. ஜபத்தில் ஓர் ஒன்றிப்பு கிடைத்தால் ஒழியத் தியானம் செய்ய முடியாது. தியானம் செய்தால் அன்றி, இஷ்ட தெய்வத்தை அடையமுடியாது. ஆதலால், பக்தியைக் கூட ஒரு முறையான வழியினில் ஏற்பாடு செய்தனர் நமது மகரிஷிகள். வித்தையில், நடத்தையில், பேச்சில், இயற்றுதலில், பக்தியில், ஞானத்தில் சிறுபிராயத்திலிருந்து ஒருமுறையான பயிற்சியினை மேற்கொள்வோருக்கு வாழ்க்கை ஆனந்த மயமாகிறது என்னும் சூத்திரம் அடங்கியுள்ளது என்பதை உணரவேண்டும். சாத்திரத்தின் படிப்பினையை அறிய வேண்டும். அநுஷ்டானத்தில் தேர்ந்தவர்களான மகான்களில் அடிச்சுவடுகளில் நடக்க வேண்டும். அவர்களின் தனித்துவத்தில் தனது தனித்துவத்தை இலயிக்கச் செய்ய வேண்டும். அப்போதுதான் அம் மகான்களின் தனித்துவம் நமக்கு உதவி செய்து, இப்போதிருப்பதைவிட இன்னும் மிகுதியாக நமது தனித்துவத்தை மலரச் செய்யும். ஆனால், அது அவ்வளவு எளிதன்று.

---

* சிரவணம் (இறைவனைப் பற்றிக் கேட்டல்), கீர்த்தனம் (போற்றுதல்), ஸ்மரணம் (நினைத்தல்), பாதஸேவனம், (திருவடித்தொண்டு), அர்ச்சனம் (பூசித்தல்), வந்தனம் (வணங்குதல்), தாஸ்யம் (சேவகனாக இருத்தல்), ஸக்யம் (நண்பனாக இருத்தல்), ஆத்மநிவேதனம் (தன்னையே அர்ப்பணித்துக்கொள்ளல்) ஆகியன. - மொழிபெயர்ப்பாளர்.

இப்பக்தியின் போக்கை ஒட்டி, பக்தியை ஒன்பது வகைகளாகப் பக்திசாத்திரம் பிரித்துள்ளது. 'ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவனம், அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் ஸக்யமாத்மநிவேதனம்' என ஒன்பது வகைப் பக்தி நிலைகளைப் போதிக்கிறது, 'பாகவதம்'. எவருக்கு எந்தத்தெய்வத்திடம் விருப்பமோ, அத் தெய்வத்திற்கு இதைப் பொருத்திக் கொள்ள வேண்டும். சிரவணம் (கேட்டல்), கீர்த்தனம் (போற்றுதல்), அர்ச்சனை (பூஜைசெய்தல்) ஆகியவற்றால் புலன்களை நன்முறையில் பயன்படுத்தல், கட்டுப்பாடு; ஸ்மரணம் (நினைத்தல்) என்னும் முறையில் பக்தி செய்வதனால் மனத்தைக் கட்டுப் படுத்தல், பாதஸேவனம் (திருவடித் தொண்டு ), வந்தனம் (வணங்குதல்) ஆகிய பக்தி முறைகளினால் அகந்தையை ஒழித்தல், தாஸ்ய பக்தி (தொண்டனாக இருந்து பக்தி செய்தல்) என்பதனால் சேவை மனப்பான்மை , ஸக்ய (சிநேக) பக்தியினால் ஒன்றிப்போவது, ஆத்மநிவேதன பக்தியினால் (தன்னையே அர்ப்பணித்துக் கொள்வதனால்) அனைத்தையுமே அர்ப்பணிக்கும் புத்தி ஆகியன பக்தனுக்குக் கிடைக்கும். இவை அனைத்திலும் முதிர்ச்சி அடைந்தால் அன்றி, பக்தி வழியில் பயணம் செய்யமுடியாது.

மேற்சொன்ன பக்திவகைகள் யாவற்றிலும் சிரவணம் (கேட்டல்) மிகவும் முக்கியமானதாகும். இச் சிரவண முறை சரியாக இருந்து விட்டால், பின்னர் பிற பக்தி முறைகள் யாவும் எளிதாகக் கைகூடும். அதனால்தான் 'ச்ரோதவ்யோ மன்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:' (கேட்கவேண்டும், மனதில் எண்ணவேண்டும், தியானம் செய்ய வேண்டும்) என்று கேட்டலுக்கு முதலிடம் அளித்திருக்கிறது சாத்திரம். சிரவணம் என்றால் கேட்பது என்று பொருள். ஈடுபாட்டுடன், நம்பிக்கையுடன் சிரவணம் செய்ய வேண்டும். இந்த ஈடுபாடும் நம்பிக்கையுமே பக்திக்கு அடிக்கற்களாக இருக்கும். ' ச்ரத்தாவான் லபதே ஞானம்' (ஈடுபாடுள்ளவன் ஞானத்தினை அடைகிறான்) என்பது பகவத்கீதையில் கண்ணனின் வாக்கு. கல்வியில் ஈடுபாடு இருந்தால் முதல்வகுப்பில் தேர்வு பெறுகிறான். இசையில் ஈடுபாடு இருந்தால் சிறந்த இசைப் பாடகனாக ஆக முடியும். இலக்கியத்தில் ஈடுபாடு இருந்தால் சிறந்த இலக்கியவாதியாகப் பிரகாசிக்கின்றான். தெய்வவிஷயத்தில் ஈடுபாடு இருந்தால் மகாஞானியாகத் திகழ்கின்றான்.

தவத்தில் ஈடுபாடு இருந்தால் தவச்செல்வனாக விளங்கு கிறான். எனவேதான் 'ச்ரத்தயா ச்ரவணம் குர்யாத்' - ஆர்வத்துடனும் ஈடுபாட்டுடனும் சிரவணம் செய்யவேண் டும் என்பது சாத்திரத்தின் ஆணை. ஆனால், இக்காலத்தில் அநேக நூல்கள் இருப்பதால் படிப்பதே அதிகமாயிருக்கி றதே அன்றி, கேட்டல் குறைவாக உள்ளதோ என்னவோ எனத் தோன்றுகிறது. எவ்வளவு ஈடுபாட்டுடன் சிரவ ணம் செய்தோமானால் அவ்வளவிற்கு அத்தேவதையினிடம் மனம் ஒட்டியிணைந்து கொள்ளும். அதுமட்டுமன்று, அனுபவமுள்ளவரின் கருத்துகள் பல கேட்பவரின் இத யத்தில் சேர்ந்து, கேட்பவருக்கு ஒருமுனைப்பு உண்டாகி றது. அவ்வாறு ஈடுபாட்டுடன் சிரவணம் செய்து தமது வாழ்வைப் புனிதப்படுத்திக் கொண்டவர்கள், பரீட்சித்து மகாராஜா, குலசேகராழ்வார், துளசிதாஸ் முதலியவர்கள் ஆவர். எல்லோருக்கும் எடுத்துக்காட்டுக்களாக விளங்குப வர்கள் இவர்கள்.

இரண்டாவது கீர்த்தனை முறைப் பக்தி அல்லது பாடி வழிபடும் பக்தி முறையாகும். சிரவணபக்தியை ஈடுபாட்டு டன் செய்தவர்களுக்கு இலக்கியம், கவித்துவம் ஆகியவை துணையானால், தேவியின் பெருமை, தனது மனத்துடிப்பு, பிரபஞ்சத்தின் நிலையற்ற இயல்பு ஆகியவைகுறித்துப் பக்தியுடனும் பற்றின்மையுடனும் பல பாடல்களை இயற்றி மகிழ்ச்சியடைகிறான் பக்தன். வசனங்களைப் படிப்பதில் ஒருவகைக் களிப்பு உண்டாகிறது. சாகித்தியம், சங்கீதம் இரண்டும் இணைவுற்றிருக்கும் ஓர் இரட்டை எனலாம். சாகித்தியம் மனத்தை ஆலோசனை செய்யும்படி செய்கி றது; சங்கீதமோ இதயத்தை அசையச் செய்கிறது. மனம் விமரிசனம் செய்யத் தொடங்குகிறது. இதயம் அனுட்டா னத்தில் ஈடுபடுகிறது. மனம் விரிந்து மலரும்படி செய்கி றது இலக்கியம். இசையோ இதய மலர்ச்சியினை உண் டாக்குகிறது. பக்தியில்லாத இசை சோபிக்காது. இலக்கி யம், எந்த உணர்ச்சிக்கு எந்தச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும், எந்த உணர்ச்சிக்கு எந்த இராகம் நன்றாயி ருக்கும் என்றும் ஆலோசனையில் ஈடுபடச்செய்யும். அந்த இராகத்தை இதயத்துடன் இணைத்து அன்பாக மாற்றி, அவ்வன்பினை இறைவனுக்கு அர்ப்பணம் செய்து, பக்தி யுடன் இதயவீணையினை மீட்டி, பக்தியுடன் பாடச் செய் கின்றது இசை. எனவே, இக்கீர்த்தனை முறைப்பக்தியில்

இதயம் முதலிடம் வகிக்கின்றது. இவ்வகைப் பக்தியின் மூலம் பக்தி விதை முளைவிடுகிறது எனலாம். கீர்த்தனைகளின் பாவங்களைக் கவனத்தில் கொண்டு கானம் செய்வது இப்பக்தி வகையின் தனிச்சிறப்பு. இத்தகைய இசைக்கு இறைவன் வசமாகிறான். இதயத்தினில் கட்டுப் படுகிறான். 'மத்பக்தா: யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி' என்று கூறினார் பகவான். இதில் 'எனது பக்தர்கள் எங்கு கானம் செய்கிறார்களோ அங்கு இருக்கிறேன்' என்று இருக்கின்றது. பக்தர்கள் அல்லாதவர்கள், பக்தி இல்லாதவர்கள் கானம் செய்தால் பகவான் அங்கு இருக்க மாட்டான் என்பதுதானே இதன் பொருள்! எனவே, பக்தியுடன் பாட வேண்டும். இராமதாஸர், தியாகராஜர், சூர்தாஸ், புரந்தர தாஸர், துக்காராம், மீரா முதலியவர்கள் தங்கள் இசையினால் பகவானை மகிழ்வித்து, பிறகு உலகத்தோரைக் கூட ஆனந்தத்தில் திளைக்க வைத்தனர். இசையில் அவ்வளவு இனிமை இருக்கின்றது. இக் கீர்த்தனைப் பக்தி முறையில் இதயத்தில் குடிகொண்டுள்ள இறைவன் பக்தனின் இசை யமுதத்தினைப் பருக வெளியே எட்டிப்பார்க்கின்றானோ, என்னவோ! விவேகானந்த சுவாமி (சிறுவயதுப்பெயர் நரேந்திரநாத தத்தர்) குரலெடுத்துப் பாடினால், அவ்வின்னிசையினால் உவகைப் பெருக்குப் பொங்கிட இராமகிருஷ்ணரின் இதயம் சமாதி நிலையில் நிலைபெற்றிருக்குமாம். அது கீர்த்தனைப் பக்தியின் சிறப்பு.

மூன்றாவது ஸ்மரண (நினைப்பு) பக்தியாகும். ஸ்மரணம் என்றால் நினைத்துக் கொண்டிருத்தல் என்று பொருள். இடைவிடாத உணர்வு ஸ்மரணை. எப்போதும் இறைவனை நினைத்துக் கொண்டிருப்பது. எதை நினைக்கிறோமோ அதையே அடைகிறோம். எனவே, மனிதன் நல்லதையே நினைத்தால் நல்லவனாகவும், கெட்டதையே நினைத்தால் கெட்டவனாகவும் ஆகின்றான். 'த்யாயதோ விஷயான் பும்ஸ: 'ஸங்கஸ்தேஷுப-ஜாயதே', ஸங்காத்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோ-தோபிஜாயதே, 'க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோ-ஹாத்ஸ்ம்ருதி விப்ரம:, ஸ்ம்ருதிப்ரம்சாத்புத்தி நாசோ புத்திநாசாத்ப்ரணச்யதி' (பகவத்கீதை, அத்தியாயம் 2 - 62,63) - புலன்தொடர்புள்ள விஷயங்களை எண்ணுகின்ற மனிதனுக்கு அவற்றின் மீது பற்று உண்டாகின்றது, பற்றுதலிலிருந்து ஆசை உண்டாகின்றது. ஆசையிலி

ருந்து சினம் வளர்கின்றது;' 'சினத்திலிருந்து மனக்குழப்பம் உண்டாகிறது; குழப்பத்தினின்று நினைவின்மை; நினைவின்மையிலிருந்து அறிவுத்திறன் அழிவு, அறிவுத்திறன் அழிவினால் அழிந்து போகிறான்' என்று பகவத்கீதையில் கெட்ட எண்ணத்தினால் கேடுறுவது பற்றி நன்கு இரண்டு சுலோகங்களில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. உலகியல் விஷயங்களைப்பற்றிய நினைப்பினால் அவற்றின் பால் பற்று, அதன் விளைவாக, கோரிக்கை அல்லது ஆசை, அவ்வாசை நிறைவேறாது போனால் கோபம், கோபத்தின் விளைவாக மனக்குழப்பம், மனக்குழப்பத்தின் காரணமாக மறதி, மறதியினால் புத்திநாசம், புத்திநாசத்தினால் சர்வநாசம் என்பது பொருள். இத்தகைய சர்வநாசத்திற்குக் காரணம் புலன்தொடர்பான விஷயங்களைப் பற்றிய நினைவே! ஆகவே மனிதன் நிலையற்ற விஷயங்களைப் பற்றி நினைப்பதை நீக்கி, நிலையான, களங்கமற்ற பகவானை நினைப்பது நன்மை தருவதாகும். எப்போது, எங்கே நினைக்கவேண்டும் என்பதில்லை. 'சுசிர்வாப்யசுசிர்வாபி' - (தூய்மையுடன் இருந்தாலும் தூய்மையில்லாது இருந்தாலும்) என்று சாத்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது. இப் பக்திவகையில் தேர்ந்தவன் பால பக்தனான பிரகலாதன். விரோதியான விஷ்ணுவினிடம் பக்தி செய்வதை நிறுத்திக் கொள்ளும்படி தந்தை இரண்யகசிபு சமுத்திரத்தில் தள்ளினாலும், நெருப்புக் குழியினில் போட்டாலும், மலையுச்சிகளிலிருந்து கீழே உருட்டித்தள்ளினாலும், பாம்புகளைக் கொண்டு கடிக்க வைத்தாலும், யானைகளைக் கொண்டு மிதிக்க வைத்தாலும் கூடத் தன் இஷ்டதெய்வத்தை ஒரு கணமேனும் மறக்காத பரமபக்தன் சிறுவன் பிரகலாதன். இவ்வளவு நினைப்புறுதிக்குக் காரணம், பிரகலாதன் தாயின் கருப்பையில் இருக்கும்போது மகரிஷி நாரதர் போதித்த பக்திவிஷயங்களை ஈடுபாட்டுடன் கேட்டதே ஆகும். எனவே, சிரவணம் அல்லது கேட்டல் என்பது நினைப்பதில் ஒன்றிப் போய், இடையறாத பெருக்காக மாறுகின்றது என்பது பொருள். அதனால்தான், எல்லாவகைப் பக்திக்ளுக்கும் சிரவணம் அல்லது கேட்டல் மிக்க இன்றியமையாததாக ஆயிற்று.

நான்காவது, பாதஸேவனம் என்னும் பக்திவகை. சேவை எல்லாருக்கும் கிடைப்பதே; ஆனால், பாதசேவை அனைவருக்கும் கிடைக்காது. சாமானியமான சேவை எல்

லோரும் செய்கின்றனர். சிறுவர்களும் பெரியவர்களுக்குச் சில தொண்டுகள் செய்கின்றனர். மாணவர்கள் ஆசிரியருக்குச் சில தொண்டுகள் புரிகின்றனர். ஆனால், பாத சேவை செய்வதற்குப் பின்வாங்குகின்றனர். பாதங்களை வணங்குவதையே செய்யாதவர்கள் பாத சேவை செய்வார்களா? அங்ஙனம் செய்வது தமது நிலைக்கு ஊறு என்றுகூட நினைக்கின்றனர். மனிதன் நிற்க வேண்டும், நடக்க வேண்டும் என்றால் இப்பாதங்கள் தேவை. மனிதன் சஞ்சரிப்பதற்கு அவனது தினசரி வாழ்க்கையில் இந்தப் பாதங்கள் இரண்டும் நிரம்பவும் தேவையானவை. எல்லா உறுப்புக்களுக்கும் அடிநிலையில் உள்ளோம் என்பதை நினைக்காது, அலுப்போ அருவருப்போ கொள்ளாது உடலின் முழுச் சுமையையும் அவை தாங்குகின்றன அல்லவா! பெரியவர்களுக்குப் பாதஸேவை செய்வது மிகவும் நல்லது. இராமபிரானின் பாதங்களின் முன் பணிவுடனும் வணக்கத்துடனும் உட்கார்ந்த நிலையில் உள்ள அனுமன் உலகமே வணங்கும் பெருமை பெற்றான். 'சிஷ்யஸ்தேஹம் ' - நான் உன் சிஷ்யன் எனச் சொல்லிக்கொண்டு, கவலைகொண்ட மனத்தோடு, ஸ்ரீகிருஷ்ண பகவானின் பாதகமலங்களைப் பணிவுடன் பணிந்து சரணடைந்த அர்ஜுனன் மூலமாகப் பகவத் கீதை வெளிவந்தது. தருமமே உருவான இராமபிரானின் திருவடித்தாமரைகளில் சேவை செய்ய வேண்டும் என்பதற்காக அன்னையையும் மனைவியையும் விட்டுவிட்டு, அண்ணனுடன் கூட வனவாசம் செய்த இலட்சுமணன் தியாகபுருஷன் ஆனான். அத்தகைய மாபெரும் பாக்கியத்தை அடையும் பொருட்டு, பரதன் இராமனின் பாதுகைகளை இராமனின் திருவடித் தாமரைகளாகவே கருதி, தலைமீது வைத்துக்கொண்டு, பின்னர், பதினாலு ஆண்டுகள் சிம்மாசனத்தின்மீது அவற்றை வைத்து, வணங்கி, பக்தர்களுள் முதல்வன் எனப் பெயர் பெற்றான். இராமனின் திருவடிகளை அலம்பிப் புண்ணியமடைந்தான் குகன். அனைவராலும் தேவதேவதையாகப் பூஜிக்கப்படும், பாற்கடலரசனின் மகளான மகாலட்சுமி மகாவிஷ்ணுவின் திருவடித் தாமரைகளில் சரணடைந்து, பாத சேவை செய்து, அனைவருக்கும் அடக்கம், பணிவு ஆகியவற்றைப் போதித்து வருகின்றாள். ஆனால், அம் மகாலட்சுமியின் அருள் பெற்ற மனிதர்களுக்கு மாத்திரம் அவளுடைய அடக்கம், பணிவு ஆகியவை வராதபோனாலும் பணச் செருக்கு மட்டும் தலைதூக்கி நிற்கிறது.

'ஸர்வே குணா: காஞ்சனமாச்ரயந்தி' - அனைத்துக் குணங்களுக்கும் புகலிடம் பணமே என்னும் பர்த்ருஹரியின் வாக்கு எத்துணை உண்மை! அகந்தை குறைந்து, அடக்கம் ஏற்படுவதற்காகவே பண்டைய ஆசிரமங்களிலிருந்த பிரம்மசாரிகளுக்கு ஸ்தான (இடம்), அங்க (உறுப்பு), பாவ ( எண்ணம்), ஆத்ம சுச்ரூஷை என்னும் நால்வகைச் சேவையை விதித்தனர் நமது பெரியோர்கள். அங்க சுச்ரூஷை என்றால் பாதசேவை என்று பொருள். இத்தொண்டுகள் பிறப்பளித்த தாய்தந்தையருடன் தொடங்கி, ஞானபிட்சை வழங்கிய குருவினிடம் சென்று, இறைவனை அடைய வேண்டும். செருக்கழிதலே இதன் விளைவு.

அர்ச்சனம் ஐந்தாவது பக்திமுறை. அர்ச்சனை என்றால் பூஜை என்பது பொருள். இவ்வர்ச்சனையினால் ஒருநிலைப்படுதல், புலன்களை நன்முறையில் ஈடுப்படுத்தல், கட்டுப்பாடு ஆகியவை கிடைக்கின்றன. பூஜைக்காக ஆசனக் கட்டுப்பாட்டுடன் உட்கார்ந்துகொள்ள வேண்டுமல்லவா! இதனால் பாதங்கள் இரண்டும் சுவாதீனப்பட்டு, ஆசனத்திற்கு (அதாவது, உடல்நிலைக்கு) ஒரு நிலைத்தன்மை உண்டாகின்றது. இதில் நிலைத்தன்மை கிடைத்தால் எல்லாவற்றிற்கும் ஸ்திரத்தன்மை கிடைப்பதற்கு வாய்ப்பு உண்டாகும். இந்நிலைத் தன்மையே பின்னர் ஜபம், தவம், தியானம், சமாதி ஆகியவற்றிற்கு அடிப்படை ஆகின்றது. வாய் இறைவனின் நாமங்களை வாசித்துச் சொல்லுகிறது. அனாவசியமான பேச்சு இல்லாததனால் அது நல்ல முறையில் பயன்படுத்தப்படுவதோடு, அதற்கு ஒரு கட்டுப்பாடும் கிடைக்கிறது. கண்கள் ஒரு புறம் புத்தகத்திலுள்ள பெயர்களையும் மறுபுறம் இறைவனையும் பார்த்துக் கொண்டிருக்கின்றன. தேவையற்ற காட்சிகளைக் காணாததனால் தூய்மையான பார்வை ஏற்படுகின்றது. கண்களினால் பார்க்கப்படும் பெயர்களை வாய் உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தால், செவிகள் மிகுந்த ஈடுபாட்டுடன் அவற்றைக் கேட்டுக்கொண்டிருக்கும். தேவையற்ற சப்தங்களைக் கேட்காமல் இருப்பதால் செவிகளுக்கு ஒரு கட்டுப்பாடு உண்டாகின்றது. ஒரு கை புத்தகத்தைப்பிடித்துக் கொண்டு, பிறிதொரு கை இறைவனுக்கு மலர்களைச் சமர்ப்பித்து அர்ச்சனை செய்கின்றது. தேவையில்லாத வேலைகளைச் செய்யாமலிருப்பதனால், கைகள் இரண்டிற்கும் கட்டுப்பாடு கிட்டுகின்றது. இவ்வாறு, எல்லா

உறுப்புக்களினாலும் நற் காரியங்களை நடத்திவரும் மனத்திற்குக் கூட நல்ல விஷயங்களில் அதிகமான ஈடுபாடு உண்டாகி, உயர்ந்த எண்ணங்கள், உயர்ந்த குறிக்கோள்கள் தோன்றும் வாய்ப்பு உண்டாகின்றது. மேற்சொன்னவாறு, எல்லா அவயவங்களும் நன்முறையில் பயன்படுத்தப்பட்டு, சூட்சுமபுத்தியை, அதாவது, நுண்ணறிவினைத் தயார்ப்படுத்துகிறது இந்த அர்ச்சனை முறை. இது இதன் தனிச் சிறப்பு.

ஆறாவது வந்தனம். வந்தனம் என்றால் நமஸ்காரம் செய்வது அல்லது வணங்குவது என்று பொருள். இரு கைகளையும் கூப்பி வணங்க வேண்டும். தெய்வத்திற்கும் மகான்களுக்கும் சாஷ்டாங்க நமஸ்காரம், அதாவது, எட்டு உறுப்புகளும் நிலத்தில் தோய விழுந்து வணக்கம் செய்யவேண்டும். வணக்கத்தில் பணிவும் அடக்கமும், பக்தியும் சிரத்தையும் தெரிய வேண்டும். இறைவனின் கோவிலுக்குச் சென்று, இறைவனுக்கு நமஸ்காரம் செய்யும்போது கண்கள் இரண்டும் மூடிக்கொள்கின்றன. அதாவது, வெளிப்பார்வைக்கு ஓர் உள்நோக்கிய பார்வையினைச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று பொருள். குருவினிடம் சென்று வணங்கவேண்டும். 'நமஸ்த்வைக்யம் ப்ரவதேத்' என்றவாறு நமஸ்காரம் ஏகத்துவத்தை, அதாவது, ஒன்றுபட்டு இருப்பதைச் சுட்டுவதாகும். எதனுடன் ஒன்றுபடுதல்? அநேகத்தில் ஒரே உருவினனாக இருக்கும் பகவானுடன், பலவாறாகக் காட்சி யளிக்கும் இந்த ஜீவத்துவத்திலிருந்து 'ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம' - பிரம்மம் இரண்டாவது இல்லாத ஒன்றே எனச் சொல்லப்பட்ட அத்விதீய, அதாவது, இரண்டாவது இல்லாத, பிரம்மத்துடன் ஒன்றுபட வேண்டும் என்பதே மனித வாழ்க்கையின் இலட்சியமாகும். இவ்வர்த்தங்களை உணர்ந்தாலும் உணராவிட்டாலும் இறைவனுக்கு இதயபூர்வமாக வந்தனம் செய்வதைத் தவறாது செய்ய வேண்டும். தலை வணங்கி நமஸ்காரம் செய்ய வேண்டும். குருக்ஷேத்திரப் போரின் தொடக்கத்தில் பெரியோர்களும் வணங்கத்தக்கவர்களும் ஆசாரியர்களுமான பீஷ்மர், துரோணர் ஆகியோரின் பாதங்களில் அர்ஜுனன் அம்புகளை விட்டான். அவை நமஸ்கார பாணங்கள் எனப்படுகின்றன. அவர்கள் இருவரும் பூரித்து மனத்திலேயே அர்ஜுனனுக்கு ஆசி வழங்கினார்கள். அதற்குள்ளாகப் போர்க்களத்திற்கு வந்த பாண்டவர்களுள் மூத்தவரான தரு

மர், தேரினின்றும் இறங்கி, பீஷ்மரையும் துரோணரையும் அணுகி, வணங்கி, 'விஜயீ பவ' (வெற்றியுடன் விளங்கு வாயாக) என்னும் அவர்களின் உளமார்ந்த திவ்விய ஆசிக ளைப் பெற்று வெற்றி அடைந்தார். நமஸ்காரத்தில் நல்ல பண்பாடு உள்ளது. பெரியோர்களின் ஆசிகள் கிடைக்கின் றன. வாழ்க்கையை இன்பமுள்ளதாகச் செய்துகொள்ளும் வாய்ப்பு உள்ளது இதில்.

தாஸ்ய பக்தி, அதாவது, சேவகனாக இருந்து செய் யும் பக்தி ஏழாவது. தாஸன் என்றால் சேவகன் என்று பொருள். பகவானை எஜமானனாகக் கருதுபவனுக்கு 'தாஸன்' என்னும் சொல் பொருந்தும். இத்தாஸனின் இடம் கீழே என எண்ணுகிறான் இந்த பக்தன். எஜமான னின் வேலைகளை எல்லாம் ஈடுபாட்டுடனும் பக்தியுடனும் செய்பவன் சேவகன். 'தம்ஸயதே ஸ்வாமிகார்யாணி ஸாவதானேனேதி தாஸ:'. எஜமானின் காரியங்களை சாவதானமாகச் செய்பவன் என்பது அதன் சொற்பொரு ளாகும். எப்போதும் எஜமானனைப்பார்த்துக் கொண் டும் தொட்டுக்கொண்டும் சேவித்துக்கொண்டும் இருப்பான் பக்தன். இவ்வகைப்பக்தியில் எஜமானனுக்கு நிரம்பவும் நெருங்கியவனாக இருப்பான். 'தவ தாஸோஹம் தவ தாஸோஹம் தவ தாஸோஹம் தாசரதே ராம' (தசரத ராமா, நான் உனது அடிமை) எனத் தம்மை வருணித்துக் கொண்டார் தியாகராஜசுவாமி. இப்பக்திக்கு எடுத்துக் காட்டு, அனைவரும் பின்பற்றுவதற்கு எடுத்துக்காட்டாக விளங்குபவரும், இடைவிடாத ராமநாமத் தியானத்தில் ஈடுபட்டவரும், பக்தர்களில் முதலிடம் பெற்றவருமான அனுமான். அத்தகைய சேவைப் பேற்றினை தனக்கும் அரு ளவேண்டும் என 'பண்டுரீதி கொலுவியவய்ய ராம' எனச் சேவாபாவத்துடன் இக் கீர்த்தனையை இயற்றி னார் தியாகராஜசுவாமி. இத்தகைய பக்தியுடன் பகவா னைச் சேவித்து, இராமதாஸர், கிருஷ்ணதாஸர் ஆகியோர் பகவானின் தாஸர்கள் ஆயினர். ஆனால், அ வர்கள் தனதாஸர்களாக (பணத்திற்கு அடிமைகளாக), வ்யஸனதா ஸர்களாக (ஆசைக்கு அடிமைகளாக) மட்டும் மாறவில்லை. அது அவர்களின் உயர்ந்த இலட்சியம். இறைவனை எஜமானனாக நம்பி, தெய்வசம்பந்தமான காரியங்களைத் தன்னலமின்றிச் செய்து, உலகப் பற்றுகளின் அடிமைக ளாக ஆகாமல் நடந்து கொள்வதே இப்பக்தியில் உள்ள

சிறப்பு.

எட்டாவது ஸக்யபக்தி (அதாவது, இறைவனைச் சிநேகிதனாகக் கருதி பக்தி செய்வது). ஸக்யம் என்றால் சிநேகம் அல்லது நட்பு. உலக வாழ்வில் சமமானவர்களிடையில்தான் நட்பு நிலைக்கும். பலவானுக்கும் பலவீனனுக்கும், பணக்காரனுக்கும் ஏழைக்கும், கல்விமானுக்கும் கல்வி இல்லாதவனுக்கும் இடையில் உலக வாழ்க்கையில் நட்பு ஏற்படாது. பணக்காரன் ஏழையை வெறுத்து விரட்டுகிறான். படித்தவன் படிக்காதவனை மதிப்பதில்லை. இனி நட்பு எங்ஙனம் ஏற்படும்? துருபதன், துரோணர் இருவரும் ஒரே குருவினிடத்தில் கல்வி பயின்றனர். மிகுந்த நட்புடன் கூடியவர்களாக இருந்தனர். பிறகு பிரிந்து போயினர். துருபதன் பேரரசன் ஆனான். ஒருதடவை துரோணர் துருபதனைப் பார்க்கச் சென்றார். அங்கு நட்பு இல்லை. பேரரசன் என்னும் கர்வத்துடன் துரோணரை அலட்சியப்படுத்தி அவமதித்தான் துருபதன். இருவரிடையிலும் எதிர்ப்புத் தோன்றியது. அவ்வெதிர்ப்பினை சிஷ்யனான அர்ஜுனன் மூலமாகத் தீர்த்துக் கொண்டார் துரோணர். இதன் விளைவாக, துருபதன், துரோணர் இருவரும் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் மரணம் அடைந்தனர். இது உலகியல் நட்பின் விளைவு. ஆனால், இப்பக்தியில் நட்பு சமானத்துவத்தையும் நிலையான தன்மையினையும் பெற்று விளங்கும். இது பகவானுடன் இருக்கும் நட்பு அல்லவா! அன்புருவான அவ்விறைவனுக்கு இவ்வேறுபாடே கிடையாது. சாந்தீபனி ஆசிரமத்தில் வித்தியாப்பியாசம் செய்தனர் கிருஷ்ணரும் குசேலரும். அவர்கள் இருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்திருக்கமாட்டார்கள். கல்வி நிறைவு பெற்றது. அவரவர் ஊர்களுக்கு அவர்கள் சென்றனர். குசேலர் மட்டும் தமது சிறுவயது நண்பனை மறக்கவேயில்லை. கிருஷ்ணனைத் தமது இஷ்டதெய்வமாகக் கருதி தினமும் நினைத்து வந்தார் குசேலர். கிருஷ்ண பரமாத்மாவோ எல்லையில்லாத போகபாக்கியங்களுடன் சிறந்து விளங்கினார். ஒருதடவை குசேலர் தமது நண்பனைப் பார்ப்பதற்காக வந்தார். எவ்வளவு ஏழ்மைத்தனமோ அக்குசேலருக்கு! இருந்தாலும், கிருஷ்ணர் தாமே வந்து, நண்பனை அன்புடன் தழுவி, உள்ளே அழைத்துச் சென்று, அவ்வுயர்ந்த பிராம்மணரின் பாதங்களைக் கழுவி, எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். நலம் விசாரித்தார். குசேலர்

கேட்காது போனாலும் எட்டுவகை ஐசுவரியங்களையும் அருளினார். உலகியெலுக்கப்பாற்பட்ட நட்பில் உள்ள இனிமை இது. கடவுளை நண்பனாகக் கருதி, ஆடிப் பாடி, அவருடன் அமர்ந்து, மோர் பருகிய இடைச் சிறுவர்களின் பாக்கியமே பாக்கியம் அல்லவா! அவர்கள் எவ்வளவு புண்ணியம் செய்தவர்களோ! நட்பின் இனிமை யில் மிகுதி, குறைவு என்பது இல்லை. இந்த நட்பை மட்டுமே சிநேகபக்தியில் பக்தன் கோருகிறான். நல்ல தகு திகளை அடைந்து சிநேக பக்தியைச் சாதிக்கின்றான். தாஸ்ய பக்தியில் கீழே உட்கார்ந்து கொண்டிருந்த பக் தன் சிநேகபக்தியில் இறைவனின் பக்கத்தில் அமர்ந்து ஆனந்தமடைகிறான். இங்கு இருப்பது சமானத்துவமே.

ஒன்பதாவது ஆத்மநிவேதனம் (தன்னையே அர்ப்ப ணம் செய்வது). சம்பூரண அல்லது முழுமையான ஆத்மார்ப்பணம் என்று பொருள். மேற்கூறிய தாஸ்ய பக்தி, சிநேகபக்தி முறைகளில் அப்பக்தர்களுக்குத்தனிப் பட்ட தனித்தன்மை தென்படுகிறதே அன்றி இந்த ஆத்ம நிவேதன முறையில் அது தென்படுவதில்லை. உன்னைத் தவிர வேறு எவரும் இல்லை என்னும் எண்ணம், தியாகம் ஆகியவை முன்னால் வரவேண்டும். அப்போதுதான் சம் பூரண பகவத்ரக்ஷணம் அல்லது இறைவனின் பாதுகாப்பு கிடைக்கும். அதுவரை அவன் வரக் கூட மாட்டான். திரௌபதி இரண்டு கைகளையும் உயரத்தூக்கி 'எல்லாம் உனக்கே அர்ப்பணம், கண்ணா' என்று சொல்லாதவரை, கிருஷ்ணன் 'அக்ஷயம்' அதாவது, '(துணி) குறைவில்லா மல் இருக்கட்டும்' எனக் கூறவில்லை. எவ்வளவு காலம் பிரார்த்தனை செய்தாலும் பயன்கிட்டாது, திக்குத் தெரி யாது, முதலையினிடம் அகப்பட்டுக்கொண்ட கஜராஜன் கால்களையும் துதிக்கையினையும் உயரத் தூக்கி 'ஆதி மூலமே' எனக் கதறி ஆத்மார்ப்பணம் செய்து கொண்ட பின்னரே, வைகுண்டத்திலிருந்து எவருக்கும் சொல்லாமல் பக்தனைக் காப்பாற்றுவதற்காக ஓடி வந்தார் மகாவிஷ்ணு. அதாவது, தனது நிலையினை, தனது தனித்துவத்தை மறந்து, அனைத்தையும் ஆண்டவனுக்கே சமர்ப்பணம் செய்வது இந்தப் பக்திமுறை.

இந்த ஒன்பதுவகைப் பக்தி முறைகளில் உலகியல் சம் பந்தங்கள் அல்லது உறவுகள் இரண்டு வெளிப்படை. அவையே தாஸ்யம், ஸக்யம், அதாவது, சேவக பக்தி மற்

றும் சிநேக புக்தி. இவை இரண்டுடன் மேலும் மூன்று உறவுகளைச் சேர்த்து சாந்தம் (அமைதி), தாஸ்யம், ஸக்யம், வாத்ஸல்யம் (குழந்தையினிடம் தாய்க்குள்ள அன்பு), மதுரம் (இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் பக்தன் நினைத்து பக்தி செய்வது) என்று ஐந்துவகைப் பாவங்களாகக் குறிப்பிட்டனர். சாந்த பக்தியில் இறைவனை படைத்தல், காத்தல், அழித்தல் என்பதற்குக் காரணமானவனாகப் பாவித்து, பக்தன் எட்ட இருக்கின்றான். அதாவது, அரசனுக்கும் குடிமக்களுக்கும் இடையேயுள்ள தொடர்பினைப் போன்றது இது. தாஸ்யம், ஸக்யம் முதலிய பக்தி வகைகளை ஏற்கனவேயே குறிப்பிட்டிருக்கிறோம்.

வாத்சல்ய பக்தியில் பகவானைத் தன்னுடைய குழந்தையாகப் பாவிக்கின்றான் பக்தன். அத்தகையவர்கள் இராமனைப் பெற்ற கௌசல்யையும் தசரதரும், கண்ணனைப் பெற்ற தேவகியும் வசுதேவரும் ஆவார்கள். அதாவது, இறைவனைக் குழந்தையாகப் பாவித்து, உபாசனை செய்து, பால வடிவில் அவ்விறைவனைக் காட்சியளிக்கும்படி செய்துகொண்டவர்கள் என்பது கருத்து. ஜடதாரி, இராமகிருஷ்ணர், அகோரமணி தேவி, சூர்தாஸ் முதலியவர்கள் அத்தகையோர் ஆவர். ஜடதாரி என்னும் துறவி ஒருவர் ஒரு தட்வை தட்சிணேசுவரத்திற்கு வந்தார். அவரிடம் ஒரு சின்ன ராம்லால் விக்கிரகம் இருந்துவந்தது. அவருடைய உபாசனை பலித்து, பாலராமனைத் தன்னுடன் வைத்துக் கொண்டு செல்வார். நாள்தோறும் பாலராமனைக் குளிப்பாட்டி, கையில் எடுத்துக் கொண்டு சீராட்டி, உணவூட்டி மகிழ்வது ஜடதாரியின் வழக்கம். இது வாத்சல்ய பாவத்துடன் செய்யப்படும் உபாசனையின் பலன். வாத்சல்ய பாவத்துடன் இராமகிருஷ்ணர் சாதனை செய்து பாலராமனையும் நந்தகிசோரனான கிருஷ்ணனையும் தரிசனம் செய்து, அவர்களைத் தமது மடியில் உட்காரவைத்துக் கொண்டு, சீராட்டி அவர்களுடன் விளையாடினார். வாத்சல்யபாவத்தில் பகவான் சிறு குழந்தையாகி, பக்தனின் மடியில் சாய்ந்து கொண்டு தனது சின்னஞ்சிறு குறும்புகளினால் பக்தனைப் புல்லரிக்கச் செய்வித்து, ஆனந்தமளிக்கின்றான். அகோரமணி தேவி பாலகிருஷ்ணனின் உபாசகி. பாலகிருஷ்ணன் எப்போதும் அவள்மீது ஏறிக் கொண்டு தொந்திரவு செய்வான். அவ்வளவு வாத்சல்யத்

தைப் பாலகிருஷ்ணன் மீது அவ்வன்னை பொழிந்தாள். அவர்கள் எத்துணை பேறு பெற்றவர்கள்!

மதுரபக்தியில் உலகியலுக்கு அப்பாற்பட்ட, தயக்கமோ ஐயமோ இல்லாத உறவு உள்ளது. அதுதான் கடவுளைக் கணவனாக வழிபடுவது. பகவான் தாங்குபவன், தாங்கப் படுபவன் பக்தன் என்பது கருத்து. பகவான் ஒருவனே புருஷோத்தமன் எனபதும் ஜீவர்கள் யாவரும் ஸ்திரீகள் என்பதும், இந்த ஜீவர்கள் யாவரும் தாங்கப்படுபவர்கள் என்பதும் உண்மையான உட்பொருள். இத்தொடர்பைப் புருஷன் மனைவி என்னும் உறவினில் பொருத்தினார்கள். 'யதா நத்ய: ஸ்யந்தமானா ஸமுத்ரேஸ்தம் கச்சந்தி நாமரூபே விஹாய' - நதிகள் எவ்வாறு தங்கள் பெயர் களையும் உருவங்களையும் விட்டுவிட்டுச்சமுத்திரத்தில் கலந்து போகின்றனவோ, அவ்வாறே ஜீவர்கள் அனை வரும் பெயர், வடிவங்களை விட்டுவிட்டு பிரம்மானந்தக் கடலில் சேருகின்றனர் என நன்கு வருணித்துள்ளது சாத் திரம். எனவே, பக்தனுக்கும் பகவானுக்குமுள்ள சம்பந்தம் வரையறுப்பிற்குட்படாதது எனச் சொல்ல வேண்டும். பக வானைக் கணவனாகப் பாவித்து வழிபட்டவர்களுள் மிக உயர்ந்த நிலையை எட்டியவள் மீராபாய். திருமணத்தின் கருத்துத்தெரியாத சிறுவயதில் திருமண ஊர்வலம் ஒன் றைச் சிறுமி மீரா பார்த்தாள். அது என்ன வென்று கேட்டு, தனக்கு ஒரு கணவன் வேண்டும் என்றாள். சின்ன கிருஷ்ண விக்கிரகம் ஒன்றை அவளிடம் கொடுத்து, 'இதுதான் உன் கணவன்' என்றனர். அன்றிலிருந்து தன் கணவன் அந்த கோபாலனே என மனம், வாக்கு, மெய் என்னும் திரி கரண சுத்தியாக நம்பி வழிபட்டாள் மீரா. திருமணம் செய்வித்தனர். இருப்பினும், புலனின்பங்களை ஒதுக்கி, கிருஷ்ண பக்தியினையே கைக்கொண்டு, உலகியல் இன் பங்களைத் தீண்டாமல், செல்வங்களுக்கு ஆசைப்படாமல், அரசகுல வழக்கங்களை மேற்கொள்ளாமல், பல தொல் லைகளுக்கு ஆளாகி, அவற்றைப் பொறுத்துக் கொண்டு, விஷத்தைக் கூட கிரிதாரியான கிருஷ்ணனுக்கு நிவேதனம் செய்து, குடித்து, தனது பக்தியினால் எல்லா இடையூ றுகளையும் கடந்து, குழலூதும் அம்மாயக் கண்ணனை, நந்தகிசோரனை 'மீரா கே ப்ரபு' (மீராவின் நாயகன்) என மீராவின் தலைவனாகக் கிரிதர கோபாலனைப் போற்றிப் பாடி, பல கீர்த்தனைகளை இயற்றி, தனது

வாழ்க்கைப் பேற்றின் பயனைப் பெற்றவள் பக்த மீரா பாய். அவள் பக்திக்கு மெச்சி, அவள் பாடல்களில் மோகமுற்று ஆனந்தமடைந்த நந்தநந்தனன் அவளுக்கு இறுதியில் மோட்சமளித்தான். அங்ஙனமே, சூர்தாஸ் கூட 'சூர்தாஸ் ப்ரபு' என்று தன் வாழ்வினைப் பாலகோபா லனுக்கு அர்ப்பணம் செய்து கொண்டார். இன்றுகூட, மீரா, சூர்தாஸ் ஆகியோரின் பாடல்களைப்பாடி, பகவத் சாக்ஷாத்காரத்தை, அதாவது, பகவானின் நேரிடையான தோற்றத்தைக் கண்டு பேறு பெற்றவர்கள் இருக்கின்றனர். ஆயினும், இன்று சூர்தாஸ், இராமதாஸ், மீரா ஆகியோரின் பாடல்கள் குறித்து 'மீரா எப்போது பிறந்தாள்? எங்கே பிறந்தாள்? அவள் இப்பாடல்களைப் பக்தியுடன் இயற் றினாளா? இல்லையா?' என்னும் கேள்விகளை எழுப்பி ஆராய்ச்சி செய்தவர்களுக்கு, கடவுள் தரிசனம் இல்லாது போனாலும் புகழ், கௌரவம் மாத்திரம் கிடைக்கின்றன. இதற்குக் காரணம் பக்தியின்மையே. இம் மதுரபக்தியில் மதுர தத்துவத்தின் சுவையினைச் சுவைப்பவர்கள் பேறு பெற்றவர்கள்.

மேலே விவரிக்கப்பட்ட தொடர்புகளில் அல்லது உறவு களில் புனிதத்திலும் நிரம்பப் புனிதமாகிய உறவு, விட முடியாத தொடர்பு, மனிதன் பிறந்ததிலிருந்து தொடங் கிய உறவு மட்டும் இல்லை. அது எது ? அதுவே தாய், சேய் உறவு. கடவுளைத் தாயாக எண்ணி, உரி மைகளையும் கடமைகளையும் ஒதுக்கி விட்டு, அன்பு பாராட்டுவது ஒன்றைத்தவிர வேறு எதுவும் அறியாத திவ்விய உறவான தாய், சேய் உறவு ஆகும் அது. குழந்தைக்குத் தாயைத் தவிர வேறு எதுவும் தேவை யில்லை. அக்குழந்தைக்குப் பொன்னைக் கொடுத்தாலும், இரத்தினங்களின் குவியல்களைக் கொடுத்தாலும் அவை தாய்க்கு ஈடு ஆகா. அவ்வாறே, இறைவனைத் தாயாக வழிபடுபவனுக்கு உலகியல் இன்பங்கள், செல்வம், தானி யம், புகழ், கௌரவம் ஆகியவை யாவும் அவனுடைய வழிபடு தெய்வத்தின்முன் பயன்படாதனவே. அவற்றிற் காக ஆசை கூடப் படமாட்டான். அவன் உள்ளும் புறமும் அமுத உருவாகிய அத்தெய்விக அன்னையைத் தரிசித்துக் கொண்டிருப்பவனுக்கு இந்தக் கணநேர இன் பங்கள் எதற்கு? பரலோக சுகங்களுக்கான ஆசைதான் எதற்கு? அவ்வன்னையின் தரிசனமே எல்லையில்லாத

செல்வம்! அவ்வன்னையுடன் உரையாடுவதே ஆனந்தம ளிப்பது! அவ்வன்னையின் கிருபை நிறைந்த கடைக்கண் பார்வையே மோட்சத்தை வழங்குவது! அவ்வன்னையின் திருமுன் துயரங்களுக்கு இடமே இல்லை அல்லவா! இதுவே இயல்பான உறவு. இதனை விஞ்சிய உறவு உலகத்தில் வேறு ஒன்று கிடையாது. பகவான் அன்னை, பக்தன் குழந்தை. இத் தெய்விக உறவினைத் தெரியப்படுத் துவதற்காகவோ என்னவோ, புலன்களுக்கு எட்டாத அச் சக்தி, தெரியும்படியான பெயர், உருவங்களைத் தாங்கியுள் ளது. அப்போது, ஜீவர்களின் கர்மங்களுக்கேற்ப தமோரூ பத்தில் அது உருவாகிறது; ரஜோ ரூபத்தில் போஷிக்கும் பொறுப்பினை ஏற்கிறது; சத்துவரூபத்தில் இலயமடையச் செய்கின்றது. இத்தகைய, செய்கையின் தன்மையினால் பாதிக்கப்படாத படைத்தல், காத்தல், அழித்தல் என்பன வற்றைச் செய்வதில் அவளுக்கு நிகர் அவளே. இத்தனை விசித்திரமான, விசாலமான படைப்பினைச் செய்த அவ ளுக்கு அயர்வு ஏற்படுமோ என்னவோ! பின்னர், அவள் தனது அலுவல்கள் அனைத்தையும் ஒருபுறம் வைத்து, ஸ்ரீ மாதாவாக அவதரிக்கின்றாள். அதாவது, தாய் உருவை ஏற்கின்றாள். அவளது உருவத்தில் வாத்சல்யம் பொங்கு கிறது. அவளது உருவத்தில் கருணை பெருக்கெடுத்து ஓடுகிறது. அவளுடைய இதயத்தில் தயை இசுரக்கிறது. அப்போது தனது குழந்தைகளின் மீது அன்புமழையை அவள் தெளிக்கின்றாள். அவள் எல்லாப் பொறுப்புகளையும் ஏற்று, தன் குழந்தைகளைக் கண்ணிமைகள்போல் காப் பாற்றுகின்றாள். ·வெய்யிலில் நடந்துவந்த வழிப்போக்கன் குளிர்ந்த நீருக்காக, குளிர்ந்த நிழலுக்காகத் தவிப்பதைப் போல், 'ஜன்ம துக்கம் ஜராதுக்கம்' (பிறப்புத்துயரம், மூப்புத்துயரம்) என்றவாறு பல பிறப்புகளில் பல துய ரங்களை அனுபவித்து, அலுத்துச் சலித்துப் போன ஜீவனும் கூட, அன்புக்காகத் அலைந்துதிரிகின்றது, அன் னைக்காக வேதனைப் பட்டு, உண்மையான பற்றின்மையு டன், புலனின்பங்களைப் புறக்கணித்து, பக்தியுடன் உலக அன்னையைப் பூஜித்து, போற்றிப்பாடி, ஜபம் புரிந்து, தியானித்து, தயாசாகரியினை, கருணாஸ்வரூபிணியினைக் கண்டுகொண்டு, ஆனந்தம் அடைகிறான். லோகமாதா விற்கு வணக்கம் செலுத்துகிறான். தனது இதயத்தினை அவளுக்குச் சேரும்படி சமர்ப்பிக்கின்றான். இனி, அந்த இதயம் புற உலகின் மீது ஆசை கொள்ளாது. இதுவே

ஸ்ரீ மாதாவின் அநுக்கிரகத்தின் விளைவு அல்லது பலன்.

இச் சக்திவழிபாட்டு முறையில் உச்சநிலையினை அடைந்தவர் இராம கிருஷ்ண பரமஹம்ஸர். சக்தி வழிபாட்டிற்குத்தவறான அர்த்தங்களைக் கற்பித்து, கேடு விளைவிக்கும் வகையில் பிரசாரம் செய்தவர்களின் கண்களைத்திறந்து, தாய், சேய் உறவினிலுள்ள தூய்மையினை நன்கு போஷித்து, சக்தி வழிபாட்டுக் கொள்கைக்கு ஊட்டமளித்த பெரியவர் அவர். காளிதேவியை ஆராதித்து, எல்லா அநுபவங்களையும் பெற்றார். அவள் அருளால் எல்லாத் தேவதைகளின் தரிசனத்தையும் கண்டார். அத் தெய்வீக அன்னையின் ஆசிகள் காரணமாக, அனைத்து மதங்களின் ஒருமைப்பாட்டினை, வெறும் வார்த்தைகளில் இல்லாத, செயல் முறையில் காண்பித்தார். 'ஏகம் ஸத் விப்ரா: பஹுதா வதந்தி' - சத்பொருள் ஒன்றே, பண்டிதர்கள் பலவகையாகக் கூறுகின்றனர் என்னும் கூற்றினை நிலைநிறுத்தி, நுகர்ந்த அனுபவரு அவர். அதுமட்டுமல்லாது, பக்தர்களுள் பக்தராகி, ஞானியருள் ஞானியாகி, வைணவர்களுள் வைணவராகி, சைவர்களுள் சைவராகி, வேதாந்திகளுள் வேதாந்தியாகி, சாக்தர்களுள் சாக்தராகி, அத்துவைதிகளுள் அத்துவைதியாகி எத்தனைவகை வழிபாடுகள் நிகழ்த்தியிருந்தாலும் எத்துணை தேவதைகளைத் தரிசித்திருந்தாலும், தமது வழிபடுதெய்வமான உலக அன்னையை மட்டும் அவர் விடவேயில்லை. மற்றும் ஒரு சிறப்பு என்னவெனில், பக்தர்களின் வாழ்வினில் பகவானிடமிருந்து பிரிவு ஏற்பட்டு, அவர்களுக்கு அவ்வப்போது துயரம் உண்டாகிறது. ஆனால், இவ்விஷயத்தில் இராமகிருஷ்ணர் மட்டும் ஒரு புதிய விவரத்தை உலகிற்கு அளித்துள்ளார். காளிதேவியினைக் காட்சி தருமாறு செய்து கொண்ட இராமகிருஷ்ணர், அவ்வன்னை தம்மைவிட்டுப்போகாதிருக்கும் வகையில் குழந்தையாக ஆனார். எனவே, இராமகிருஷ்ணரை விட்டுவிட்டுச் செல்லும் வாய்ப்பு அவ்வன்னைக்கு இல்லாமற்போய்விட்டது. குழந்தைத் தத்துவத்தினால் அன்னையைக் கட்டிப் போட்ட இராமகிருஷ்ணருக்கு அவளிட மிருந்து பிரிவு என்பதே இல்லை. எல்லாம் ஆனந்தமே. இராமகிருஷ்ணரின் அன்னைவழிபாட்டின் தனித்தன்மை இதுவே! இதுதான் சக்திவழிபாட்டில் குழந்தைத்தத்துவம் எனப்படுவது! வெளியே பக்தியினையும் உள்ளே ஞானத்தினையும் ஒருமைப்படுத்தி இணைத்து உபதேசித்த

ஒருமைப்பாட்டு அவதாரம் அவர். உலகியல்கல்வி இல்லாத ஆன்மிக அறிவு நிதி. பண்பில்லாதவர்களைப் பண்படுத்தியவர். பண்புள்ளவர்களுடனும் பண்பில்லாதவர்களுடனும் கலந்து பழகும் முறையினை சிஷ்யர்களுக்குக் கற்பித்த ஜகத்குரு. மாபெரும் அறிஞர்களைத் தமது திருவடிகளுக்கு இழுத்த மாமனிதர். பெண் தெய்வமான காளிதேவியின் வழிபாட்டுடன், பைரவி பிராம்மணியினால் உபதேசிக்கப் பெற்ற தந்திர உபாசனையுடன், பெற்ற தாயினிடத்தில் கொள்ளும் கௌரவ பாவனையுடன், உலகியல் நோக்கில் மனைவியான அன்னை சாரதாதேவியினை உலகியல் நோக்கிற்கு அப்பாற்பட்ட பார்வையுடன் நோக்கி, அவளை உலக அன்னையாக வழிபட்ட உயர்ந்த நிலையுடன், பெண்கள் அனைவரையும் உலக அன்னையாகவே கண்ட இராமகிருஷ்ணர் வழிபடுபவர்களுக்கு எப்போதும் நினைவில் கொள்ளத் தக்கவராவார்.

இச் சக்திஆராதனையின் விளைவாக மிக உயர்ந்த நிலையினை அடைந்த மகான்கள் பலருள் இராமபிரஸாத், கமலாகாந்த், சியாமா சாஸ்திரி, முத்துஸ்வாமி தீட்சிதர், இராமகிருஷ்ண பரமஹம்ஸர் முதலியவர்கள் முக்கியமானவர்கள். அவர்கள் கூறியதை, அவர்களுடைய சிஷ்யபரம்பரை வாயிலாகவோ, அவர்களின் நூல்களின் மூலமாகவோ, நாம் கிரகித்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், இச் சாக்த வழிபாட்டினால் மனிதனுக்கு அப்பாற்பட்டசக்திகளைப் பெற்று, பன்முகச் சிறப்பினை அடைந்து, எல்லாக் கலைகளிலும் தேர்ந்தவரான எனது குரு தேவர் பூஜ்ய அநுபவானந்தசுவாமிகளைத் தரிசனம் செய்து, அவருடைய திருமுன் வித்தை பயின்று, சுமார் இருபது ஆண்டுகள் அவரது சிஷ்யையாக இருந்து அவரை வழிபட்டுச் சேவை செய்யும் மாபெரும் பேறு எனக்குக் கிட்டியது. இதை அவ்வன்னையின் பேரருளாகக் கருதுகிறேன். சுவாமிகள் மூலமாக, சக்தி வழிபாட்டின் பெருமையினை உணர்ந்து, அவருடைய திவ்விய ஆசிகளைப் பெற்றேன்.

எனவே, மனிதன் முதலில் உலகியல் கல்வியினைக் கற்று, உலகியல் இன்பங்களை அடைந்து, நீதி, கட்டுப்பாடு ஆகியவற்றைப் பின்பற்றி, பராவித்தையான தெய்விக வித்தையினை அறிந்து, பராசக்தியின் தயவினைச் சம்பாதித்து, மனவமைதியினைப் பெற வேண்டும். நமது வித்தை நமக்கு முன்னால், வழிகாட்டியாக அமைய வேண்

டும். நமது பண்பாட்டிலுள்ள சிறப்பினை உணரவேண்டும். நமக்கு அறிவுப்பிச்சையிட்ட பெரியோர்களைக் கௌரவிக்க வேண்டும். மனிதவாழ்வு இன்பம், மகிழ்ச்சி ஆகியவற்றுடன் திகழவேண்டும் என்னும் நோக்கத்துடன் நமக்கு வழங்கப்பட்டுள்ள அறநெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். செல்வம் திரட்டுவதோடுகூட, தருமத்தை உணர்தல், தருமத்தைக் கடைப்பிடித்தல், தருமத்தைக் காத்தல் ஆகியவற்றை ஒரு விதியாக நடத்த வேண்டும். இல்லறத்தோர் தமது குழந்தைகளுக்கு தனம், தானியம், வீடுவாசல், நிலபுலம் ஆகியவற்றைக் கொடுப்பதோடு கூட, தரும நெறியினையும் சொல்லித்தரவேண்டும். இது இன்றைய உலகிற்கு நிரம்பவும் தேவையானது. உலகியல் வித்தைகளைக் கற்பதுடன், வாழ்வில் அமைதியினை அளிக்கவல்ல ஆன்மிக வித்தையினையும் பயில வேண்டும். இயற்கை அறிவியலுடன் கூட, யோக ரகசியங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். உலகில் ஒவ்வொருவருக்கும் ஒரு பொறுப்பு உள்ளது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். தவறான எண்ணத்துடன், தவறான தொடர்புள்ள சூழ்நிலையில் இருந்தால் அத்தவறான இயல்பே உலகெங்கும் பரவி, தீய வழிகளுக்கு வழிவகுக்கும். தான் மேம்பாடடைந்து, உலகிற்கும் நல்லதே கிடைக்கும்படி செய்வதற்கு உழைக்க வேண்டும் என்பதை மறக்கலாகாது. நல்ல எண்ணங்கள், நல்லோர் உறவு, நன்னடத்தை ஆகியவற்றால் தானும் இன்புற்று, அவ்வின்பத்தினைச் சமுதாயத்திற்கும் வழங்க வேண்டும் மனிதன். ஆனந்தம் வாழ்விற்கு அமுதத்திற்கு ஒப்பானது. எனவேதான், 'ஆனந்தாத்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே! ஆனந்தேன ஜாதானி ஜீவந்தி ஆனந்தம் ப்ரயந்த்யபிஸம்விசந்தி! ' - எல்லா ஜீவன்களும் ஆனந்தத்திலிருந்து பிறந்தவை, ஆனந்தத்தினால் உயிர் வாழ்கின்றன, ஆனந்தத்திலேயே இலயமடைகின்றன என்பது நமது உபநிடதத்தின் போதனை. தனிநபர் நன்றாயிருந்தால் சமுதாயமும் நன்றாயிருக்கும். தனிநபர் சமுதாயத்தினின்றும் வேறு அல்லன். ஒவ்வொரு தனி ஆளும் சமுதாயத்திற்கு ஒரு தூணைப்போன்றவன். தனி ஆள் தனது தனித்தன்மையினை நிலைநிறுத்திக் கொண்டு, சமுதாயத்தின் கௌரவத்தையும் காப்பாற்ற வேண்டும். சமூகத்தின் முன்னேற்றத்திற்குத்தனி ஆளே காரணம். தன்னலம் ஒழிந்து, ''ஸர்வே ஜனாஸ் ஸுகினோ பவந்து' - எல்லோரும் இன்பமாக இருக்கட்டும்

என்னும் பரந்த இதயம் மனிதர்களுக்கு உண்டாகும்வரை உலகில் அமைதியின்மை தவிர்க்கமுடியாதது. விவேகத்து டன் பகுத்தறிவு முன்னே வரவேண்டும். அவ்வளவிற்கு இதயம் விழிப்புற்றுக் கிளர்ந்தெழ வேண்டும். இதுவே நமது சனாதன தருமம்! இதுவே நமது ரிஷிகளின் மரபு! அத்தகைய இன்பம், அமைதி ஆகியவற்றை ஸ்ரீ மாதா நமக்கு அருள்வாளாக!

'ஸர்வமங்களமங்கள்யாம் ஸர்வானந்தப்ரதாயினீம்' |
ப்ரஸன்னவதனாம் தேவீம் சாரதாம் ப்ரணமாம்யஹம் ||

(அனைத்து நலன்களுடன் கூடியவளை, அனைவருக்கும் ஆனந்தம் தருபவளை, மலர்ந்த முகத்தையுடையவளை, சாரதாதேவியை நான் வணங்குகிறேன்.)

'அஸதோ மா ஸத்கமய |
தமஸோ மா ஜ்யோதிர்கமய |
ம்ருத்யோர்மா அம்ருதம் கமய |

(மெய்யல்லாததிலிருந்து மெய்க்கு என்னை அழைத்துச் செல்க. இருட்டிலிருந்து ஒளிக்கு என்னை அழைத்துச் செல்க. இறப்பிலிருந்து இறப்பின்மைக்கு என்னை அழைத்துச்செல்க. )

ஓம் அமைதி, அமைதி, அமைதி.



# சாதன ரகசியம்

## The Secret of Yoga Sadhana

**SADHANA RAGASYAM** *(Tamil), (The Secret of Yoga Sadhana) is a spiritual wish yeilder to the aspirant. This great book intimately brings one to the path of self-realization. Swami Anubhavananda manifests himself in every letter of the book; appears like the emboidment of rich experience and preaches secrets of self-realization to the enthusiastic spiritual aspirants. This book of rich experience explains the secrets of yoga sadhana in such a simple style that even those who have no scientific knowledge can grasp the scientific approach to the education of spiritual path and can practically experience the essence of many great books, simply by the study of this holy book.*

*Enter the path of Yoga Sadhana, today itself, through this book and realize the path of self-realization as prepounded by our great saints, and conquer experience. It is impossible to pitch upon a book that can explain the path of self-realization better than* ***SADHANA RAGASYAM*** *(Tamil).*

*This book hasbeen translated from* ***'SADHANA RAHASYAMU*** *(The popular Telugu book on 'Yoga', the 11th edition now in circulation) and published in other languages such as, Sanskrit, English, Hindi, Bengali, Malayalam, Kannada, Marathi, Oriya and to be translated into many other foriegn languages.*

***Oh! Blessed devotees of Yoga! Carry the Message of Swami Anubhavananda from shore to shore and from door to door and realise yourself.***

*Popular Edition : Rs. 35-00 Library Edition : Rs. 70-00*

*Superior Edition (Large Size) : Rs. 200-00*

